



# “என்னாலும் முடியும் தம்பி”





‘உன்னால் முடியும் தம்பி’ படம் வெளியான அன்று, பகல் காட்சி முடிந்த சமயம், ‘ரிப்போர்ட் ஓ.கே.’ என்ற திருப்தியுடன் முகம் மலரப் பேசினார் கே. பாலசந்தர். உரையாடலின் சில பகுதிகள்:

‘‘உங்களது வழக்கமான படங்களிலிருந்து இது மாறுபட்டுள்ளதே!’’

‘‘ஆமாம்! தந்தை மகன் இவர்களின் உணர்ச்சிகரமான மோதலைக் கதையின் மையமாய் வைத்து ஒரு படம் பண்ண வேண்டும் என்பது என் வெகுநாளைய ஆசை. ஆனால் மோதலுக்குக் காரணம் கதாநாயகனின் தனிப்பட்ட பிரச்னையாய் இல்லாமல், ஒரு சமுதாயப் பிரச்னையாய் இருக்க வேண்டும் என விரும்பினேன். இதற்கிடையில் ஒரு ஷூட்டிங்கிற்காக விசாகப்பட்டினம் போன போது ஒரு வித்தியாசமான நபரைச் சந்தித்தேன். அவர் பெயர் பரமேஸ்வர ராவ். அவரைப் பற்றியும், அவரது சேவையைப் பற்றியும் கல்கியில் ‘நாம் ஒவ்வொருவருமே காந்திதான்’ என்ற தலைப்பில் ஒரு கட்டுரை வெளியாகியிருந்தது. அதே மனிதர்தான்... அவரது செயல்கள் என்னை வியக்க வைத்தன. குறிப்பாக, எந்த சமுதாய மாற்றம் என்றாலும், முதன் முதலில், அந்தப் பகுதியின் பெண்களை அதில் ஈடுபடுத்த வேண்டும், அவர்கள் மூலமே மாற்றத்தைச் செயல்படுத்த வேண்டும் என்கிற அவரது அணுகுமுறை என்னை மிகவும் கவர்ந்தது. ஏற்கெனவே மனத்திலிருந்த கதைக் கருவுடன் இந்த நிஜ வாழ்க்கை கதாபாத்திரத்தை இணைத்தேன். ஆனால் வயதில் முதியவராய் இல்லாமல், ஓர் இளைஞனாய்ச் சித்திரித்தேன். அந்தப் பாத்திரத்தைக் கமல் ஏற்றுச் செய்தால்தான் நான் சொல்ல வந்த விஷயத்தின் முழுத் தாக்கமும் வெளிப்படும் என்று தோன்றியதால் பிடிவாதமாகக் கமலையே நடிக்கச் செய்தேன்.

''ஏற்கெனவே இது தெலுங்கில் வந்த படமா?''

''ஆமாம்! ருத்ர வீணை என்று தெலுங்கில் எடுத்தேன். அதில் நான் செய்த தவறு, சிரஞ்சீவியைக் கதாநாயகனாகப் போட்டது. சிரஞ்சீவி அங்கே ஒரு 'ஆக்ஷன் ஹீரோ'. அவர் உட்கார்ந்து கர்நாடக இசை பாடுவதை ஜனங்கள் ரசிக்கவில்லை. படம் தோல்வி! அதையே தமிழில் எடுக்க முடிவு செய்த போது, 'எதற்கு, வீணாய் ரிஸ்க்?' என்றார்கள். ஆனால், ஒரு நல்ல கருத்தைச் சொல்ல வேண்டும் என்ற வேகத்தில் துணிந்து இறங்கி விட்டேன். தோல்வியை வெற்றியாக்க 'என்னாலும் முடியும் தம்பி' என்று உணர்த்த வேண்டாமா?''

''தந்தை — மகன் போராட்டம்தான் என்றாலும் அதிலும் புதுமையான அணுகு முறையைக் கையாண்டிருக்கிறீர்கள் போலிருக்கிறதே!''

''ஆமாம்: அப்பா மாபெரும் இசைக் கலைஞன். கலைஞனுக்கு இசைதான் பிரதானம். சமுதாயம் பற்றிய எண்ணமே வேண்டாம் என்பது அவரது சித்தாந்தம். ஆனால் மகனோ இசையை மதித்தாலும் 'நான் முதலில் மனிதன், அப்புறம்தான் கலைஞன்' என்கிறான். இவர்கள் போராட்டம் தவிர, கள்ளச் சாராயம், மரம் வளர்ப்பு, குழந்தைத் தொழிலாளர்கள் என்று பல விஷயங்களையும் சேர்த்திருக்கிறேன்.''

''படம் சில காட்சிகளில் சிந்துபைரவியை நினைவூட்டுகிறதே?''

''நோ...! நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். எங்கே மக்கள் அப்படிச் சொல்லி விடுவார்களோ என்பதற்காகவே, மிகவும் எச்சரிக்கையுடன் நான் திரைக்கதையையும், வசனங்களையும் அமைத்தேன்.''

''டைட்டில், கதாநாயகனுக்கு உதய மூர்த்தி என்ற பெயர்.... இதெல்லாம்....''

''இந்தப் படத்தின் நோக்கமே, சமுதாயத்தைச் சாடாமல் பாசிடிவ்வாகச் சில கருத்துக்களைச் சொல்வதுதான். அதனால்தான் உன்னால் முடியும் தம்பி என்று டைட்டில்... கதாநாயகன் வித்தியாசமானவன்.. என்பதால் அதிகம் வழக்கத்தில் இல்லாத பெயரைச் சூட்டினேன். தவிர, டாக்டர். எம். எஸ். உதயமூர்த்தியும் நானும் அண்ணாமலை பல்கலைக் கழகத்தில் ஒன்றாய்ப் படித்தவர்கள். அவரது நம்பிக்கையூட்டும் எழுத்துக்களில் எனக்கு ஈடுபாடு உண்டு. மற்றபடி அவரது மக்கள் சக்தி இயக்கம், ஹீரோவின் அமைதிப் புரட்சி இயக்கம், இதெல்லாம் யதேச்சையாக நேர்ந்த ஒற்றுமைகளே.

— எஸ். சந்திரமௌலி.

படம்: சுபா ராதாகிருஷ்ணன்.

---

# சிக்கன திலகம்!



அமெரிக்காவின் அடுத்த ஜனாதிபதி அநேகமாக மைக்கேல் டுகாகிஸ்ஸாகத்தான் இருப்பார். ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த இவரை அக்கட்சி தனது வேட்பாளராகத் தேர்ந்தெடுத்து விட்டது. குடியரசுக் கட்சி வேட்பாளரை டுகாகிஸ் பொதுத் தேர்தலில் சந்திப்பார்.

மைக்கேல் டுகாகிஸ் சிக்கனத்துக்குப் பெயர் போனவர். இவர் மனைவி கிட்டி ரொம்ப நாள் வாதாடி ஓர் ஏர் கண்டிஷனர் வாங்கச் செய்தார். சில தினங்கள் சென்று கிட்டியின் தோழிகள், 'குளுகுளு சாதனம் நன்றாக வேலை செய்கிறதா?' என்று விசாரித்தனர். 'யாருக்குத் தெரியும்! அதை ஆன் பண்ண மைக்கேல் அனுமதித்தால்தானே! கரண்ட் பில் ஏகமாக ஆகி விடுமாம்!' என்று அலுத்துக் கொண்டார் கிட்டி!

— நியூஸ்வீக்.

இலவசம்!




பாப்பாவுக்கு ஒரு அழகிய பீங்கான் கிண்ணம்
-பாசத்துடன் அளிப்பது ஃபாரெக்ஸ்.

ஒரு அழகான பயனுள்ள
பீங்கான் கிண்ணம் —
இதிலே, பாப்பா மிகவும்
விரும்பிச் சாப்பிடும்!

பாப்பாவின் சுவைமிக்க
சத்துணவு ஃபாரெக்ஸ்
ஒவ்வொரு டின்
வாங்கும்பொழுதும்
இலவசம் இந்த அழகிய
பீங்கான் கிண்ணம்.

இப்போது கிடைக்கிறது
தேர்ந்தெடுத்த
கடைகளில்!




GX/37/213 TML

# பட்டனை அழுத்தினால்

செம்பியன்



"பட்டனை அழுத்தினால் போதும், ராஜீவ் காந்தி தாம் யாருடைய டெலிபோன் பேச்சை ஒட்டுக் கேட்க விரும்புகிறாரோ, அதைக் கேட்கலாம்: அப்படிப் பட்ட நவீன ஒட்டுக் கேட்கும் கருவிகளை அவர் தருவித்து வைத்திருக்கிறார்'' என்று ஹெக்டே கூறியதாகச் செய்தியைப் படித்ததிலிருந்து அத்தகைய ஓர் ஒட்டுக் கேட்கும் கருவியை எப்படியாவது நாமும் பெற்று விட வேண்டும் என்று எனக்கு ரொம்ப ஆசையாகப் போய் விட்டது. அமெரிக்காவிலிருந்து எனது நண்பன் இரு தினங்களில் இந்தியா வரப் போவதாக டெலிபோன் செய்த போது அத்தகைய கருவி ஒன்றை வாங்கி வருமாறு கேட்டுக் கொண்டேன்.

''பூ. இதென்ன பிரமாதம்! அத்தகைய கருவிகள் இங்கே சிறப்புத் தள்ளுபடி விலையில் ஒவ்வொரு சூப்பர் மார்க்கெட்டிலும் கிடைக்கின்றன; வாங்கி வருகிறேன்'' என்றான். கொடுத்த வாக்கை நிறைவேற்றவும் செய்தான்.

''இதைப் பயன்படுத்தப் போய்த்தான் வாட்டர்கேட் விவகாரத்தில் நிக்ஸன் பதவி இழந்தாரா?'' என்று கேட்டேன்.

''ச்சீ! நீ எந்த யுகத்தில் இருக்கிறாய்? இது இருபத்தோராம் நூற்றாண்டுக் கருவியாக்கும்! நீ உன் மனத்தில் யாரையாவது நினைத்துக் கொண்டு அவர்கள் 'இனிஷியலை'க் குறிக்கும் பட்டனைத் தட்டினால் போதும். அவர்கள் ஃபோனில் பேசுவது உனக்குக் கேட்கும்!'' என்றான். ''சரி, இப்போ உனக்கு யாருடைய பேச்சை ஒட்டுக் கேட்க வேண்டும் சொல்லு!''

''வேறு யார்? ஆர். வி. பேசுவதைத் தான். அவர் போனைக் கூட ராஜீவ் ஒட்டுக் கேட்கிறார் என்றுதானே ஹெக்டே புகார் செய்திருக்கிறார்! அதனால் நாமும்தான் ஒட்டுக் கேட்டு வைப்போமே'' என்றேன்.

ஒட்டுக் கேட்கும் கருவியுடன் கூடிய போனில் நண்பன், 'ஆர்' மற்றும் 'வி' என்ற பட்டன்களை அழுத்தினான். ரிஸீவரை என்னிடம் தந்தான்.

''ஹலோ! ராஜீவா? நான்தான் ஆர். வி. பேசறேன்'' என்று குரல் கேட்டது.

''நமஸ்தே ஆர். வி. ஜி! மாமி சௌக்கியமா?'' என்றார் ராஜீவ்.

''அவள் சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல்? எனக்குத்தான்....''

''அடடா! உங்களுக்கு என்ன உடம்பு? ராஷ்டிரபதி பவன் டாக்டர்கள் என்ன பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்? உடனே அவர்கள் செயல்பாட்டை ஆராய ஒரு கமிஷன் அமைக்கிறேன்....''

''அதெல்லாம் வேண்டாம்! என் உடம்புக்கு ஒன்றுமில்லை. மனசுதான் சரியில்லை. நீங்க பாட்டுக்கு நாகாலாந்தில் ஜனாதிபதி ஆட்சின்னு முடிவெடுத்து விட்டு என்னிடம் அனுப்பிக் கையெழுத்துப் போடச் சொல்றீங்க. எதிர்த் தரப்புக்கு மாநிலச் சட்ட மன்றத்தில் பெரும்பான்மை நிரூபிக்க ஒரு வாய்ப்புத் தரலை. நாடாளுமன்றம் கூடியிருக்கிறது. அங்கே விஷயத்தைச் சொல்லலை. ஜனங்க என்ன, 'பூட்டாசிங் ஆட்சி'ன்னா சொல்றாங்க? 'ஜனாதிபதி ஆட்சி'ன்னு சொல்லி என்னைத்தான் ஏளனமாப் பேசறாங்க. பத்திரிகைகளும் ஜனாதிபதி ஆட்சி



கொண்டு வரப்பட்ட விதத்தைத் தாக்கு தாக்குன்னு தாக்குது... குறைந்தபட்சம் நீங்க ஒரு முடிவெடுக்கு முன்பு என்னை யாவது கலந்து ஆலோசிக்கக் கூடாதா?''

''இதோ பாருங்க, ஆர். வி. ஜி! உங்களைக் கலந்தாலோசித்தால் நீங்க வேறு



ஒரு யோசனை கூறலாம். அது எனக்குப் பிடிக்காம இருக்கலாம். கருத்து மாறுபாடு, மன வருத்தம், சண்டை, பூசல்னு வளரும். பத்திரிகைகளெல்லாம் 'பிரதமருக்கும் ஜனாதிபதிக்கும் தகராறு' என்று எழுதும். எதற்கு வீண் வம்பு? இப்ப பாருங்க, நான் ஒரு முடிவெடுத்த பிறகு உங்களைக் கையெழுத்து மட்டும் போடச் சொன்னால் உங்களுக்கு யோசிக்கவே இடமில்லை: அதனால் மனஸ்தாபத்துக்கும் இடமில்லை: தகராறு நம்மிடையே உருவாக வாய்ப்பே இல்லை.... உங்களுக்கும் 'ஜனாதிபதி தமது ரப்பர் ஸ்டாம்ப் பணியை நன்றாக நிறைவேற்றுகிறார்' என்று நல்ல பெயர்.....''

''அடடே! நான் இந்தக் கோணத்தில் யோசிக்கவே இல்லையே! என்ன இருந்தாலும் ராஜீவ், ராஜீவ்தான்! சரி, சாயந்திரம் சந்திப்போமா?''

''ஓ! மாமிகிட்டே சொல்லி வடையும் டிகாக்ஷன் காப்பியும் ரெடி பண்ணச் சொல்லுங்க. இல்லாட்டி எல்லாருக்கும் தர மாதிரி எனக்கும் எலுமிச்சம் பழ சர்பத் வந்துடும், ராஷ்டிரபதி பவன் சமையல் கட்டிலிருந்து!'' என்றார் ராஜீவ்.

**அ**வருடைய டிகாக்ஷன் காப்பி ஆசை உலகப் பிரசித்தமானதால் நான் வியப்படையாமல் 'எம்' பட்டனை அழுத்தினேன். மொரார்ஜி குரல் கேட்டது. ''ஹலோ!''

# ஓட்டுக் கேட்கலாம்!

''நான்தான் மசானி பேசறேன். நீங்கள் பாகிஸ்தானிடம் விருதும் சன்மானமும் வாங்கிக் கொள்ளப் போவது பற்றி ஏகமாகப் புகார் பண்ணுகிறார்களே?'' என்று மசானி குரலும் ஒலித்தது.

''என்ன தப்பு அதில்? எனது ஆட்சி காலத்தில் இந்தியா — பாகிஸ்தான் உறவு நல்லுறவாக இருந்தது என்பதால் பாராட்டிக் கௌரவிக்கிறாங்க. அதை வாங்கிக் கொண்டால் இவர்களுக்கு ஏன் வயிற்றெரிச்சல்?''

''ஏதோ பப்ளிஸிடி ஸ்டண்ட்: அது இது என்று.....''

''நாளைக்கே, போஃபர்ஸ் பூதம் புறப்பட்ட ஸ்வீடன் நாட்டில் ராஜீவுக்கு அமைதிப் பணிக்கான நொபெல் பரிசு தருகிறதா அறிவித்தால் அதையும் பப்ளிஸிடி ஸ்டண்ட்னு காங்கிரஸ்காரங்க சொல்லுவாங்களா? ராஜீவ், பரிசு தமக்கு வேணாம்னு மறுத்துடுவாரா? நொபெல் நிறுவனத்தின் ஒரு பிரிவுதான் போஃபோர்ஸ் என்பது உனக்குத் தெரியுமில்லையா?''

மசானி இதைக் கேட்டு 'ஓஹோஹோ' என்று சிரிக்க, நானும் தவறிப் போய்ச் சிரித்து விட, ''மூன்றாவது குரல் கேட்கிறதே, யார் அது?'' என்று அதட்டினார் மொரார்ஜி.

''வேறு யாருமில்லை: நான்தான் ராஜீவ்!'' என்று கூறி அவசரம் அவசரமாக போன் தொடர்பைத் துண்டித்து விட்டு மீண்டும் 'என்' பட்டனை அழுத்தினேன்.

''நாவலரா? என்ன இப்படி பல்டி அடிச்சுட்டீங்க?'' என்று கருணாநிதி குரல் கேட்டது. ''எத்தனை இடம் என்பது முக்கியமில்லை: காங்கிரஸ்•டன் கூட்டணி அமைப்பதுதான் முக்கியம்னு பேசியிருக்கீங்களே!''

''அதுவா.... ஹி.... ஹி'' என்று வழிந்தார் நெடுஞ்செழியன். ''அது பாருங்க, அண்ணா ஆட்சியில் அவருக்குக் கீழே இருந்தேன்: உங்க ஆட்சியிலே நெம்பர் டூ: எம்.ஜி.ஆர். ஆட்சியிலும் அவருக்கு அடுத்தபடியாக இருந்தேன். நிம்மதியா இருந்துச்சு. பிறகு தற்காலிக முதல்வர். பதவி. நெம்பர் ஒன் இடம். என்ன ஆச்சு? நாலு நாள் கூட நிலைக்கலே. நமக்கு ராசியில்லீங்க. 'ஜெ' கோஷ்டியில் நெம்பர் டூவா இருக்கப்ப நிம்மதியா இருந்துச்சு. இப்ப மறுபடி நெம்பர் ஒண்ணு — நினைக்கவே பயமா இருக்கு. அதனால்தான் எப்படியாவது இ. காங்கிரஸ்•டன் கூட்டுச்சேர்ந்து நெம்பர் டூவாகவே தொடர்ந்து இருந்துடலாம்னு பார்க்கறேன்.....''

இந்தச் சமயத்தில், ''இப்ப உங்களை நெம்பர் ஒண்ணுன்னு யார் நினைக்கச் சொன்னது. நான் ஒருத்தி இருக்கிறது மறந்து போச்சா?'' என்று விசாலாட்சியின் குரல் காட்டமாக ஒலிக்கவே, நாவலர் பயந்தாரோ இல்லையோ, நான் நடு நடுங்கிப் போய் போனை வைத்து விட்டேன்!



# பாட்டி சொல்லைத் தட்டாதே

இங்கு கூடியிருக்கும் தாய்மார்களே, தந்தைமார்களே, பாட்டிமார்களே, மற்றும் லாரிகளில் கொண்டு வரப்பட்ட மகா ஜனங்களே, முதற்கண், என்னுடைய வணக்கம். எனக்கு முன் பேசிய தோழர் சிவப்பையா, பாட்டி சொல்லைத் தட்டாதீர்கள் என்று முழங்கினார். அதுகுறித்து உங்களுக்குச் சில காட்சிகளைச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன்.

பேரன் மீது கொள்ளைப் பிரியம் வைத்திருக்கும் பாட்டி! நான் கேட்கிறேன், மனோரமாவைத் தவிர வேறு யாராவது ஒரு நடிகையால் அந்தப் பாட்டி ரோலைச் சிறப்பாகச் செய்ய முடியுமா? பேரன் படிப்பை முடித்துவிட்டு, கிராமம் திரும்பும்போது, வாண வேடிக்கை என்ன, புலியாட்டம், கரகாட்டம் என்ன, அந்த நேரத்தில் பாட்டியின் முகத்தில் என்ன பெருமிதம்! தன் பேச்சைத் தட்டி, பேரன் திருமணத்திற்குத் தானே பெண் செலக்ட் செய்து கொண்டவுடன், சட்டசபையைக் கலைத்த அன்றைக்கு நம் தலைவர் முகத்தில் இருந்ததே அப்படி ஒரு சோகம். பிரிந்து போன பேரனுக்குக் குழந்தை பிறந்துவிட்டது என்று அறிய வரும்போது என்னவோ எலெக்ஷனுக்குத் தேதி சொல்லிவிட்டதுபோல் அப்படியொரு சந்தோஷம். தாயே மனோரமா, நீ தமிழர் தொகுதிக்கு ஆற்றும் பணியை என் சிரத்தால் உன் பாதம் தொட்டுப் பாராட்டுகிறேன்.

இதே மேடையில் அமர்ந்திருக்கும் 198 — ஆம் வட்டச் செயலர், பாண்டியராஜன் அமர்க்களமாக நடித்திருக்கிறார் என்று அளந்து விட்டார். நெற்றியைச் சுருக்கிக் கொண்டு, எல்லா வசனத்தையும் ஒரே ரீதியில் பேசினாரே, அது அமர்க்களமா? நாட்டியம் ஆடுவதற்கு அவஸ்தைப்பட்டு நம்மையும் அவஸ்தைப்படுத்தினாரே அது அமர்க்களமா?

அடுத்ததாக ஊர்வசி. இந்த அம்மான் போன தடவை டெபாஸிட் இழந்தவர்களாக இருக்கலாம். இடைத் தேர்தலில் இனிமையாக வெற்றி பெற்று விட்டார் என்பதை இந்த சபைக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன்.

பாட்டு போட்டிருக்கிறாரே, சந்திரபோஸ்! ஏனய்யா, போன படத்தில் போட்ட அளவிற்குக் கூட இந்தப் படத்தில் மியூஸிக் போடவில்லையே, ஏன்? படத்தின் பெயர் பாட்டி காலத்துப் பெயர் என்பதால் தூசும், அழுக்குமாக டியூன் போடுவதா? 'வெத்தலை மடிச்சுக் கொடுக்க ஆசையா' என்று ஒரே ஒரு — ஒரே ஒரு — ஒரே ஒரு — பாட்டுதான் மறுபடி மறுபடி கேட்கும் அளவிற்குச் சுத்தமாய் இருக்கிறது.



தலைவர் என்னை அமரச் சொல்லிச் சைகை செய்கிறார். அமருமுன் கடைசியாக ஒரு வார்த்தை!

ஏவி. எம். நிறுவனத்திற்கு இதைப் போல காமாசோமா படம் தேவையா? ராஜசேகர் என்ற சிங்கம் புல்லைத் தின்பதா? காமிராக்காரர்......

தலைவர் மறுபடியும் என்னை உட்காரச் சொல்லி ஜாடை செய்கிறார். உட்காருமுன் கடைசி கடைசியாக ஒரு வார்த்தை.

மனோரமாவுக்கே உங்கள் பொன்னான வாக்குகளைப் போடுங்கள்!

— ஜெயமன்மதன்

துப்பறியும்

# சூர்யா–கிரண்

நவின் பிரதாப் முல்லிக்

ஜோஷிக்கு ஒரே குழப்பம்......

எனது துபாய் ஆள் வங்கியை அடைவதற்கு 5 நிமிஷம் முன் கல்தான் எல்லாப் பணத்தையும் வாங்கி விட்டான். இது எப்படி?

ஜோஷி யோசித்தபடியே சிறைச்சாலையை அடைந்தார்.

POLICE

துபாயில் உன் பணத்தை வங்கியிலிருந்து வாங்கியது யார்?

எனக்குத் தெரியாது.

எனக்குத் தெரியாது.

இவன் பேச மாட்டான். நாமேதான் கண்டுபிடிக்கணும்.

ஜோஷியைக் காண அப்போது சூர்யா வந்தான். இருவரும் நீண்ட நாள் நண்பர்கள்



போலி பாஸ்போர்ட் வழங்கும் ஒருவரைக் கைது செய்துள்ளோம். அவர்கள் தலைமையகம் துபாயில் இருக்கிறது.

எனக்கும் துபாயில் ஒரு சிக்கல்......

நான் ஏதும் உதவ முடியுமா? இரண்டு நாளை துபாய் போகிறேன்.

விவரமாய்ச் சொல்றேன் கேள்... கல்தான் பணத்தை வங்கியிலிருந்து வாங்கியவனைக் கண்டுபிடிக்க முடியுமா?

4

(தொடரும்)


பீகாரில் தீவிரவாதிகள் 14 பேர் படுகொலை! - செய்தி
உன் மொகரக் கட்டைக்கு கரி பூசினா மாத்திரம் போதாது! உன் கையாலாகாத ஆட்சியைக் காப்பாத்த மத்திய ரிசர்வ் போலீஸ் வந்திருக்கு!
உடம்புக்கும் சார்!
பீகார் மக்கள்
C.R.P.


ரேஷன் அரிசியைப் பாதியாகக் குறைக்காதே! அரசு வேலையை ஒழிக்காதே!


தாய் கட்சியான காங்கிரஸ்லே வந்து சேருங்க! - ப்ளீஸ்!
இதோ நாங்க சேருகிறோம்! இத்தனை இடம்னு தெரியும் மூச்சு விடலயே!



# கல்கி

1988 ஆகஸ்ட் 28
மலர் 47 இதழ் 4
விபவ ஆவணி 12



## ஒரு சர்வாதிகாரியின் மரணம்

ஒரு சர்வாதிகாரியின் மரணம் என்றாலும் பாகிஸ்தான் அதிபர் ஜியாவின் வாழ்க்கை முடிவுக்கு வந்த விதம் ஆழ்ந்த வருத்தத்துக்கு மட்டுமின்றி பலத்த கண்டனத்துக்கும் உரியது. அவரும் வேறு பல ராணுவ உயர் அதிகாரிகளும் அமெரிக்கத் தூதரும் பயணம் செய்த விமானம் திடீரென்று வெடித்துச் சிதறியதில் அத்தனை பேரும் உயிரிழந்தனர். இதனை விபத்து என்றோ, விமானம் பழுதாகியிருந்தது என்றோ சொல்வதற்கில்லை. பாக் அதிபர் பயணப்படும் விமானம் நன்றாகப் பராமரிக்கப்படாமல் இராது. விமானிகளும் முதல் தரமானவர்களாகவே இருப்பர். எனவே இது சதி வேலை என்று கருதப்படவே நிறைய இடமிருக்கிறது. சதி வேலையைச் செய்தவர் யார்? யாராயிருப்பினும் ஜியாவுடைய சர்வாதிகாரப் போக்கை விரும்பாதவர்கள் என்பது தெளிவு.

இந்தியாவுடன் சேர்ந்தே சுதந்திரம் பெற்ற பாகிஸ்தான், தனது 41 ஆண்டு கால வாழ்வில் மிகக் குறைந்த கால கட்டத்திலேயே மெய்யான ஜனநாயகத்தைக் கண்டிருக்கிறது. புட்டோவின் ஆட்சியில்தான் ஜியாவுக்கு அதிர்ஷ்டம் அடித்தது. தமக்கு விரோதமான ஓர் அமைப்பின் செல்வாக்கைக் குறைப்பதற்காகவே அதனிடம் அனுதாபமும் தொடர்பும் கொண்டிருந்த ஜியாவை ராணுவப் பிரதம தளபதியாக்கினார் புட்டோ. இதன் காரணமாகக் கோபித்துக் கொண்டு ஏழு பாக். ராணுவத் தளபதிகள் ராஜினாமா செய்தனர்!

இவ்வாறு புட்டோவினால் ராணுவத்தில் உன்னத நிலைக்கு உயர்த்தப்பட்ட ஜியா, புட்டோவையே கவிழ்த்து விட்டுப் பாகிஸ்தான் நாட்டின் சர்வாதிகாரியானார். புட்டோவைச் சிறை வைத்தார். அவர் மீது ஒரு கொலை வழக்கை ஜோடித்து மரண தண்டனையும் பெற்றுத் தந்தார். அரசியல் சாசனத்தை ரத்து செய்தார். தேர்தல் நடத்துவதாகப் போக்குக் காட்டியே மக்களை ஏமாற்றினார். நடந்த ஓரிரு தேர்தல்களும் கட்சி சார்பின்றி, ஜனநாயகத்தையே கேலி செய்யும் விதமாக விளங்கின. 77—இல் பதவிக்கு வந்த ஜியா கடந்த பதினொரு ஆண்டுகளாக அசைக்க முடியாதபடி சர்வாதிகாரம் செலுத்தி வந்தார். அவருக்கு மரணத்தைத் தருவித்துத் தருவது தவிர வேறு வழியில் அவரைப் பதவி நீக்கம் செய்ய முடியாது என்ற முடிவுக்கு அவரது எதிரிகள் வந்திருக்க வேண்டும்.

ஜியாவின் ஆட்சிக் காலத்தில் இந்தியா — பாகிஸ்தான் உறவு படிப்படியாக மோசமாகிச் சமீப காலத்தில் அடிமட்ட நிலைக்குத் தாழ்ந்து விட்டது. அணுகுண்டு தயாரிப்பில் தீவிர ஆர்வம் காட்டிய ஜியா, ஆப்கானிஸ்தான் பிரச்னையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு ஏராள அமெரிக்க ஆயுதங்களைத் தட்டிக் கேட்டுப் பெற்று வந்தார். ராணுவ ரீதியில் தமது நாட்டை மிகவும் பலப்படுத்தினார். இவையே இந்தியாவுக்குப் போதிய தலைவலி தருவன என்றால் இதற்கும் மேல் பஞ்சாப் தீவிரவாதிகளுக்கு அவர் ஊக்கமும் உதவியும் அளித்து வந்ததானது, இந்தியா—பாகிஸ்தான் உறவுகளை மிகுந்த சோதனைக்குள்ளாக்கியது.

இவையெல்லாம் ஒரு பக்கமிருந்த போதிலும் ஜியாவின் மரணமும் அது நேர்ந்த விதமும் அதிர்ச்சி அளிப்பதாகவே உள்ளன எனில் அதற்கு இரு காரணங்கள். காப்டனை இழந்த கப்பல் பயணிகள் போல் உள்ள பாக். மக்கள் பால் நமக்கு ஏற்படும் அனுதாபம் ஒன்று. அவர்களிடம் நமக்கு விரோதம் ஒன்றுமில்லையல்லவா? இரண்டாவது, அடுத்தாற் போல் உருவாகி வரப் போகிற தலைவர் மீண்டும் ஒரு சர்வாதிகாரியாக, ஜியாவைவிட மோசமானவராக இருந்து விடக் கூடாதே என்ற கவலை!

ஜியா ஆட்சியுடன் ராணுவ ஆட்சிக்கும் பாகிஸ்தானில் ஒரு முடிவு ஏற்பட்டு, அங்கு ஜனநாயகம் தழைத்து, நிலையான ஆட்சி உருவாக வேண்டும் என்பதே சகோதர ஜனநாயக நாடான இந்தியாவின் விருப்பம். இந்தப் பாக்கியத்தை பாக் மக்கள் அடைய மனப்பூர்வமாக நாம் பிரார்த்திக்க வேண்டும். பாகிஸ்தானின் ஜனநாயக மேம்பாடும் பொருளாதார வளமுமே நமக்கும் பக்கபலம். ஒருவேளை ஜனநாயகம் திரும்ப முடியாமல் ராணுவ ஆட்சியே நீடிக்குமானால் புதிதாக வரும் அதிபர் விவேகமுள்ளவராக விளங்கட்டும். ராணுவத் தயார் நிலையை விட நட்புறவே நாட்டுக்குப் பலம் என்பதை உணர்ந்தவராக அவர் திகழட்டும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# தூங்காமைக்கும் தூண்டும்

**எ**ன் மூத்த மருமகளைப் போல இனிமேல் ஒரு பெண் பிறந்தாத்தான் உண்டு. அவ்வளவு சுறுசுறுப்பும்மா....! காலையில் மூணு மணிக்கே எழுந்து, வாசல் தெளிக்கறதுல ஆரம்பிச்சு, அவ்வளவு வேலைங்களையும் நான் எழுந்து வரத்துக்கு முன்னாலேயே முடிச்சுடுவா.... மத்தியானமும் தூங்கமாட்டா. பம்பரமாச் சுழன்று வேலை செய்துகிட்டே இருப்பா' — 'இப்படி ஒரு மாமியார் தன் மருமகளை மெச்சிக் கொள்வாளா என்ற சந்தேகம் ஒருபுறமிருக்க, அந்த மருமகள் உண்மையிலேயே ஆரோக்கியமான சுறுசுறுப்புடன் செயல்படுகிறாளா என்பதே கேள்விக்குரியதுதான்" என்கிறார் மனநோய் நிபுணர் **டாக்டர் மாத்ருபூதம்.**

''இது ஒருவகை 'மேனியா.' இந்தப் பெண்களுக்குத் தூக்கமே வராது. மூன்று மணிக்கே எழுந்து கொண்டு எல்லா வேலைகளையும் முடித்து விட்டு அடுத்தது, அடுத்தது என்று வேலைக்கு அலைவார்கள். இவர்கள் மற்ற சிலரைப் போல் 'தூக்கம் வரவில்லை' என்று புலம்ப மாட்டார்கள், ஆனால் இவர்களும் தூக்கமின்மையால் பாதிக்கப்பட்டவர்கள்தான். இந்த 'மேனியா' காரணமாக உண்டாகும் நிலையை 'மேனியாக் டிப்ரஸிவ் சைக்கோஸிஸ்' (MDP) என்பார்கள்.''

''இவ்வாறு சிலர் தூங்க முடியாமல் தவிப்பதற்கு என்ன காரணம்?'' என்று டாக்டரிடம் கேட்டோம்.

''தூக்கமின்மைக்கான காரணங்களைத் தெரிந்து கொள்வதற்கு முன்னால் சராசரி மனிதனின் இயல்பான தூக்கம் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். தூக்கம் இயற்கையானது — இதயத் துடிப்பைப் போல, மூச்சு விடுவது போல உடலோடு இணைந்த ஓர் இயக்கம். ஆரோக்கியமான மனிதர்களுக்கு நாளொன்றுக்கு ஆறு முதல் எட்டு மணி நேரத் தூக்கம் போதுமானது. சீரான தூக்கத்துக்கு உதவுவது மூளையின் மையத்தில் உள்ள 'ஹைபோதாலமஸ்' என்ற பகுதி. இந்தப் பகுதியின் தூண்டுதலால்தான் நாம் தூங்குகிறோம்; சூரிய ஒளி தோன்றியதும் இயல்பாக விழிக்கிறோம்.

''மூளையிலுள்ள செல்களுள் முப்பது சதவிகிதத்தை நாம் அன்றாட இயக்கங்களில் பயன்படுத்துகிறோம். இந்த செல்கள் பழுதடைந்து விட்டால் தூக்கம் வராது; வயதான ஆண்களுக்கு 'பிராஸ்டேட் கிளாண்டுகள்' வீங்கி, சிறுநீர் கழிப்பதில் சிரமம் ஏற்பட்டால் தூக்கமின்மை உண்டாகும்; இதய நோய் உள்ளவர்கள், ஆர்தரைடீஸால் அவதிப்படுபவர்கள் — இவர்கள் எல்லோரையும் 'இன்ஸோம்னியா' என்ற தூக்கமின்மை பீடிக்கக்கூடும். ஆஸ்த்துமா உள்ளவர்களைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். நான்கைந்து தலையணைகளை அடுக்கி அதன் மீது சாய்ந்த வண்ணம் இரவு முழுவதையும் கழிப்பார்கள். இவையெல்லாமே உடல் உபாதைகளால் ஏற்படும் தூக்கமின்மை பிரச்னைகள். நோய் குணமானால் இவர்களுக்கு நிவாரணம் கிடைக்கலாம்.''

''உடல் உபாதைகளல்லாத வேறு காரணத்தாலும் தூக்கமின்மை ஏற்படுமா?''

''ஆமாம். ஆரம்பத்தில் சொன்ன 'மேனியாக் டிப்ரஸிவ் சைக்கோஸிஸ்' போன்ற நிலைகள் மனம் சம்பந்தமான பிரச்னைகளால் ஏற்படுபவை. மூளை பாதிக்கப்பட்ட குழந்தைகள், மனச் சோர்வால் கட்டுண்ட முதியவர்கள் — இவர்களைத் தூக்கமின்மை பீடிக்கும். காதல் வயப்பட்டவர்களால் தூங்க முடியாது என்பது வெறும் கட்டுக்கதை இல்லை;



'பாலும் கசந்ததடி, படுக்கை நொந்ததடி' என்பது வெறும் கவியின் கற்பனையும் அல்ல. அதே போல், பரீட்சைக்குப் போக இருப்பவர், விடிந்தால் ஒரு முக்கியமான பந்தயத்தில் கலந்து கொள்ள இருப்பவர் போன்றவர்களுக்கும் தூக்கம் வராது. தற்காலிகக் காரணங்களால் தூங்காமல் இருப்பவர்கள் அதிர்ஷ்டசாலிகள். பரீட்சை முடிந்தவுடனோ போட்டி முடிந்த பிறகோ இவர்கள் நன்றாகத் தூங்கி இழந்த தூக்கத்தை ஈடு கட்டி விடலாம். உண்மையிலேயே அதிகம் அவஸ்தைபடுபவர்கள் போதை மருந்துகளுக்கு அடிமையானவர்கள்தாம். இவர்கள் போதை மருந்து இல்லாமல் தூங்க முடியாது என்ற நிலையை அடைந்து விடுவார்கள். அந்தப் பழக்கத்திலிருந்து விடுபட்டால் இயல்பாகத் தூங்க முடியாமல் மிகவும் தவித்துப்

# தூக்கமின்மை!

போவார்கள். இதனால் ஏற்படும் துன்பத்தைத் தாங்க முடியாமல் மீண்டும் போதைப் பொருட்களை நாடுவார்கள்.''

''சில கைக்குழந்தைகள்தூங்காமல் அழுது கொண்டே இருப்பது ஏன்....?''

''குழந்தைகளைத் தூக்கமின்மை நோயாகப் பிடிப்பதில்லை. இரண்டு மணி நேர உறக்கத்துக்குப் பின் எழுவதும் பிறகு சற்றைக்கெல்லாம் மீண்டும் உறங்கு வதும் குழந்தையின் இயல்பு. அதைப் பெரிதாகப் பாராட்டக் கூடாது. தூங்காமல் ஒரு குழந்தை அழுமானால் அதற்கு அஜீரணம், அல்லது பசி போன்ற உடற்கூறு காரணங்கள் இருக்கும்.''

''இளைஞர், முதியோருள் தூக்கமின்மையால் அதிகம் பாதிக்கப்படுபவர்கள் யார்?''

''முதியோருக்கு மன உளைச்சல் ஒரு காரணமாய் இருக்கிறது. இளைஞர்கள் சிலருக்குப் பாலுணர்வுடன் கூடிய கனவுகள் ஏற்படும். இது இயற்கையானது என்று அறியாமல் அவமானப்பட்டுப் போய் மன உளைச்சலால் தூக்கம் இழந்து தவிப்பவர்கள் உண்டு.

''அதீதமான துக்கம் காரணமாகவும் தூக்கம் வராது. மனைவி அல்லது பெற்றோரின் மரணம் போன்ற காரணங்கள் எல்லோரையும் பாதிக்கும். மனோதிடம் உள்ளவர்கள் அந்த பாதிப்பிலிருந்து மெள்ள மெள்ள விடுபட்டு விடுவார்கள். ஆனால் மன வலிமை குறைந்தவர்கள் அல்லது இல்லாதவர்கள் அதை ஒரு பெரிய நோயாகவே வளர விட்டு விடு

* மனத்தைக் கள்ளமில்லாமல் வைத்திருந்தால் ஆனந்தமாய்த் தூங்கலாம்!





கிறார்கள்.''

''தூக்கமின்மையின் உடன் விளைவுகள் என்ன டாக்டர்....?'' என்று நாம் கேட்டுக் கொண்டிருந்த போதே ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி தம் மகளுடன் வந்து, ''டாக்டர் உங்களை இப்போதே பார்த்தாக வேண்டும்'' என்று பிடிவாதத்துடன் கூறினார்.

அவருடைய தீவிரத்தைப் புரிந்து கொண்ட டாக்டர் நம்மிடம் தற்காலிகமாக விடைபெற்றுச் சென்றார். சிறிது நேரம் கழித்து அவரை மீண்டும் சந்தித்த போது கூறினார்:

''அந்தப் பெண்மணிக்கு நீரிழிவு நோய்; அதிக ரத்த அழுத்தமும் உண்டு. சதா அலுத்துக் கொள்ளும் சுபாவம். அவரால் மிக மிகக் குறைவாகவே தூங்க முடிகிறது. அதனால், 'ஏன்தான் பொழுது சாய்கிறதோ' என்று சலிப்பு; ஆத்திரம். கூடவே 'நாம் ஏன் வாழ வேண்டும்' என்று அடிக்கடி மனத்துக்குள் ஒரு கேள்வி எழ ஆரம்பித்து விட்டது. 'டாக்டர்! எனக்கு எப்படியாவது தூக்கத்தை வரவழைத்து விடுங்கள்; இல்லாவிட்டால், நான் தற்கொலைதான் செய்து கொள்ளணும்' என்று புலம்ப ஆரம்பித்து விட்டார். அவருடைய அதீத நிலைமை புரிந்துதான் நான் உடனே கவனிக்கச் சென்றேன்.''

''தூக்கமின்மை தற்கொலையைக் கூடத் தூண்டுமா என்ன....?''

''அதிகபட்சம் 72 முதல் 96 மணி நேரம் வரை ஒருவரால் தூங்காமல் தாக்கு பிடிக்க முடியும். அதற்கும் மேல் தூங்க இயலாமல் கஷ்டப்படுபவர்கள் தீவிரமாகப் பாதிக்கப்படுவார்கள். மூளைக் கோளாறு ஏற்படும். தனக்குத் தானே பேசிக் கொள்வது, பிதற்றுவது, போன்ற செயல்களைச் செய்ய ஆரம்பிப்பார்கள். தற்கொலை உணர்ச்சி தலைதூக்கும்.''

''கேட்கவே பயமாக இருக்கிறதே! தூக்கமின்மை இவ்வளவு பெரிய பிரச்னையாய் இருக்குமா என்ன....?''

''தூக்கமின்மை எல்லோரையும், எப்போதும் தற்கொலைக்குத் தூண்டும் என்று சொல்ல முடியாது. ஆரம்பத்தில் அசாதாரணமாக, அனாவசிய கோப தாபங்கள் ஏற்படும். சிறிய விஷயங்களுக்குக் கூடப் பொறுமை இழந்து கத்துவதும் எதிலும் பூரணமாக மனத்தைச் செலுத்தி ஈடுபட முடியாமல் தவிப்பதுமாய் இந்த நோயாளிகள் இருப்பார்கள். எளிதாகச் செய்யக் கூடிய சாதாரணச் செயல்களைத் தப்பும் தவறுமாகச் செய்வார்கள். அதனால் பிறர் பார்வையில், திறமை குறைந்து, அசடுகளாகத் தோன்றுவார்கள். சின்ன பிரச்னைகள் கூட இவர்களுக்குப் பூதாகாரமாகத் தோன்றும். மன உளைச்சல் அதிகரிக்கும்....''

''இந்த நோயை முற்றிலும் குணப்படுத்த முடியுமா? என்ன சிகிச்சை அளிக்கிறீர்கள்?''

''காரணத்தைக் கண்டுபிடித்து விட்டால் நோயைப் பாதி குணப்படுத்திவிட்ட மாதிரிதான். உடல் பரிசோதனை மற்றும் மனோதத்துவ பரிசோதனைகள் செய்து காரணத்தைக் கண்டறிய முயற்சி செய்வோம். உடற்கூறு பாதிப்புகளுக்கு மருந்து கொடுத்து குணப்படுத்துவது முதல் கட்டம். அதன் பிறகு மனத்தை அமைதிப்படுத்த பயிற்சிகள் — இதற்குத்தான் நமது பழம்பெரும் முறைகளான பிராணாயாமம் ஆழ்நிலை தியானம் போன்றவை





• டாக்டர் என். மாத்ருபூதம்.

பெரிதும் உதவுகின்றன.

"சிலருக்கு ஹிப்னாடிச முறையில் தூக்கம் வர உதவுகிறோம். இவர்கள் 'நான் தூங்கப் போகிறேன்: தூங்கப் போகிறேன்' என்று தங்களுக்குத் தாங்களே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொள்கிறார்கள். புற்று நோய் முற்றிய நிலையில் அவதிப் படுவோர், தீராத நோயுடையவர் போன்றோருக்கு இம் முறை கை கொடுக்கும்."

"சிலர் அடிக்கடி தூக்க மாத்திரைகள் சாப்பிடுகிறார்களே....?"

"மருத்துவர் கூறினாலேயொழிய தூக்க மாத்திரை சாப்பிடுவது அறவே கூடாது. டாக்டர் அறிவுரையின் பேரில் சாப்பிடு பவர்கள் கூட அவர் குறிப்பிட்ட அளவில் குறிப்பிட்ட காலத்தில்தான் சாப்பிட வேண்டும் – ஒரு மாத்திரை பலனளிக்க வில்லை என்று தாமாகவே இரண்டு மாத் திரைகளை முழுங்கக் கூடாது. மீண்டும் மருத்துவரைக் கலந்தாலோசித்தே அள வைக் கூட்டவோ குறைக்கவோ செய்ய லாம்."

"தூக்கம் வர மது உதவுமா?"

"மது அருந்தி தூக்கத்தை வரவழைத் துக் கொள்ளலாம் என்ற தவறான நம் பிக்கை சிலரிடையே உள்ளது. இதைப் போன்ற கெடுதலான, தவறான செயல் வேறு இல்லை. பிரச்னைகளைத் தாற் காலிகமாக மறக்க மட்டுமே மது உதவு கிறது. போகப் போக மதுவின் அளவு அதிகமாகி, தூங்கும் நேரம் குறைவாகி, தூக்கமின்மையோடு மதுப் பழக்கமும் வந்து பற்றிக் கொள்ளும். அதுவே பெரிய பிரச்னை ஆகிவிடும்."

"ஒரு சராசரி மனிதன் நன்றாகத் தூங்கி உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ள என்ன வழி?"

"ரொம்ப சுலபம். உடல் தாங்கக் கூடிய அளவு தேகப் பயிற்சி செய்ய வேண்டும். நாளைக்கு நாலு கிலோ மீட்டர் நடந்தாலே போதும். அளவாகச் சாப்பிட்டு (முக்கால் வயிறு) மனசையும் கள்ளமில்லாமல் வைத் துக் கொண்டால் ஆனந்தமாகத் தூங்க லாம்!"

— சாருகேசி

மேலட்டை வண்ணப்படம், புகைப்படம்:
**கே. வி ஆனந்த்.**

நடிப்பு: **ஸ்ரீவத்ஸன்**

# போர்

பொய்த் தூக்கம்தான் இது.

"வித்யா... வித்யா..." என்று கூப்பிட்டதை — அருகில் படுத்ததை — மிருதுவாக அணைத்ததை — உணராத ஒரு தூக்கம். யாருக்கும் வராது. வித்யாவுக்கு வராது.

கோபம்! கண்களில் அனல் பறக்க, வார்த்தைகளால் வெடிக்கிற கோபம். வார்த்தைகள் வராத போது மௌனம் கூட ஆயுதம். புறக்கணித்தல் கூடப் போர் முறை.

போரா? வித்யா யுத்தம் புரிகிறாளா?

பாஸ்கரன் தனக்குள் சிரித்துக் கொண்டான்.

"வித்யா.... யேய்...." அவளுக்குக் கிளர்ச்சியூட்டிப் பழக்கப்பட்டிருந்த த்வனியில் மீண்டும் அழைத்தான். தோளைத் தொட்டுத் திருப்பினான். மேலும் நெருங்கி, காது மடலில், மூக்கால் கோடு இழுத்தான்.

"திரும்ப மாட்டேளாக்கும்?"

"..........."

"ஸாரிடா கண்ணா... ப்ளீஸ்... அவசரப்பட்டுட்டேன். என் புத்திதான் தெரியாதா உனக்கு?"

"..........."

"வித்யா......"

வெடுக்கென்று தன்னை விடுவித்துக் கொண்டு குப்புறப்படுத்தாள். முதுகில் செத்த பாம்பாய்ப் பின்னல் சரிந்தது. காய்ந்து போன பூ வாசனை வந்தது.

அவனுள் சன்னமான எரிச்சல் பரவியது. தன்மானத்தில் சூடு விழுந்தது. "பார்ப்பம்... எத்தனை நாளைக்கு?"

சட்டென்று விலகினான். உடம்பில் ஸ்பரிசம் படாமல் தள்ளிப் படுத்தான்.

அதற்கும் பதில் இல்லை. இருக்கிறாளா செத்துப் போனாளா என்று தெரியவில்லை. மல்லாந்து, கூரையைப் பார்த்துக் கொண்டு கிடக்கவும் கஷ்டமாக இருந்தது.

கஷ்டம்தான் இது. தான் அப்படி கேட்டிருக்கக் கூடாது. தகப்பனை பிறந்த வீட்டை — குறை சொன்னால் எந்தப் பெண்ணிற்கும் பொறுக்க முடியாதுதான். அதற்காக இப்படி கோபிக்க வேண்டுமா?

சிகரெட் பற்ற வைத்தான். புகை இழுத்து ஊதும் போது தனிமையாக உணர்ந்தான்.

இதற்குத்தான் கல்யாணம் பண்ணிக் கொண்டதா? ஏமாந்து விட்ட மாதிரி இருந்தது அவனுக்கு.

வீட்டில் கல்யாணத்திற்குப் பெண் பார்த்துக் கொண்டிருந்த போதுதான் அவளது சிநேகிதம் வாய்த்தது.

சாதாரண கணக்குப் பிள்ளையின் மகள். ஒரு டாக்டரிடம் உதவியாளாக இருந்தாள். விதவிதமான நோயாளிகளைச் சந்திக்கிற உத்தியோகம்......

விபத்தில் அடிபட்ட தனது அக்காள் புருஷனுக்காக அடிக்கடி அங்கு போக வேண்டியிருந்தது. காத்திருக்கிற நேரங்களில் அவளையே பார்த்துக் கொண்டிருப்பான்.

அவனைப் பார்த்ததும் சிநேகிதமாகப் புன்னகை புரிவாள். தன் உள்ளே ஏதோ நிறைகிற மாதிரி இருக்கும் அவனுக்கு. இரண்டு மாத பழக்கத்தில் எந்த ஒரு நொடியில், மனம் முழுமையாக அவளை ஆக்கிரமித்தது என்று தெரியவில்லை. சதா அவளது நினைவு.

வயசுப் பெண் ஒருத்திக்கு நேசிப்பில் வெளிப்படும் பார்வையைப் புரிந்து கொள்ள முடியாதா?

சந்தித்தார்கள்.

வளர்த்துக் கொண்டார்கள்.

ஒரு கட்டத்தில் பெற்றோரை நினைத்தார்கள் — இரண்டு வீடுகளிலும் எதிர்ப்புதான்.

"என்ன வித்யா இது...?" தனிமையில் சந்தித்துப் புலம்பினான்.

"விடுங்க... இந்த விஷயத்துல எந்த வீட்ல தான் சம்மதிச்சு இருக்காங்க...."

"இனி என்ன பண்றது?"

"இனிமேல்தான் எவ்வளவோ இருக்கு..."

அந்தப் பருவத்தில், அத்தகைய தருணத்தில், பெண்ணின் நெருக்கத்தில் ஊட்டப்படுகிற தைரியம் மகா பலம். பாஸ்கரனின் நெஞ்சு உரம் பெற, ஊரை விட்டுக் கிளம்பினார்கள். பதிவுக் கல்யாணம் பண்ணிக் கொண்டார்கள்.

வாழ்க்கை அப்படியொன்றும் நம்பிக்கையற்றுப் போய் விடவில்லை. கைப் பணம் தீர்வதற்குள் அவனுக்கு ஒரு வேலை கிடைத்தது. எளிய வருமானம். அப்பாவின் சொந்தத் தொழிலில் செலவு செய்து பழக்கப்பட்ட கைகள், சம்பளத்திற்காகச் சேவகம் புரிகின்றன. ஆனால், தானே ஏற்றுக் கொண்டது தானே அது என்பதில் குறையாகத் தோன்றவில்லை.

வித்யாவும் அனுசரித்துப் போகிறவளாகவே இருந்தாள். வருமானத்திற்குள் குடும்பம் நடத்தி —

அவனது நலத்தில் அக்கறை காட்டி —

மும்தாஜ் யாசின்

''இப்படி வேலை பார்த்தா உடம்பு என்னத்துக்கு ஆகும்'' என்று கோபித்து —

சீக்கிரமாக வரச் சொல்லிக் கோவிலுக்குப் போய் —

சினிமாவுக்குப் போய்....

. . மூன்று மாதங்களுக்கு முன்புதான் முதல் சண்டை வந்தது.

ஒரு அதிகாலையில் அவனை உசுப்பி, ''பால்காரன் வந்துருவான். பாக்கி தரணும்'' என்றாள் அவள்.

''சில்லறை இல்லை.... சம்பளம் வாங்கித் தரலாம்.....''

''என்னால கடன் சொல்ல முடியாது...''

''உங்க வீட்ல யாரும் சொன்னது இல்லையா?''

அப்போதைக்கு அவளது பலவீனமான ஒரு பகுதி என்பது அவனுக்குத் தெரியாது. முகத்தை ஒரு மாதிரியாக வைத்துக் கொண்டு அவள் போவதைப் பார்க்க ஆச்சரியமாக இருந்தது.

இரவு சேர்ந்து படுக்கும் போது, ''வசதி இல்லாத குடும்பத்தில் பிறக்கிறது ஒண்ணும் பாவம் அல்ல'' என்றாள் வித்யா.

''ஸாரி... நான் அந்த அர்த்தத்துல சொல்லலை....''

''எந்த அர்த்தத்துல சொன்னாலும் சரி. நிஜம் இதான். என்னால் கடன் கேட்டுக் கூனிக் குறுகி நிற்க முடியாது......''

''சரி... இனிமே பால் வாங்க





"என் வீட்டு வேலைக்காரிக்கு ரொம்பத் திமிர். என்னை ரொம்ப இன்ஸல்ட் பண்றா."

"அப்படி என்ன செஞ்சா?"

"நான் போடற காப்பி மட்டம்னு காண்பிக்கிறதுக்காக வரும்போதே பிளாஸ்க்ல காப்பி கொண்டு வர்றா."

— சேத்தூர் அன்பழகன்.

வேணாம்...."

தனக்குள்ளும் ஏதோ ஒரு பகுதியில் காயம் பட்ட மாதிரி இருந்தது பாஸ்கரனுக்கு. குடும்பம் நடத்துவதற்குக் காதல் மட்டும் போதாது என்பது புரிய ஆரம்பித்தது. அதற்கு உப்பு, புளி, மிளகாய், வீட்டு வாடகை, முகப்பவுடர், கூந்தலுக்கு மல்லிகைப் பூ எல்லாம் வேண்டும். அதுவும் தனது சம்பளத்திற்குள்.....

நேற்றைக்கும் கூட ஓர் அற்ப காரணத்திற்காகத்தான் சண்டை வந்தது.

சம்பள நாள். மல்லிகைப் பூவும், பலகாரப் பொட்டலமும் வாங்கி வந்தான். அவள் எதையும் தொடவில்லை.

"எதுக்கு இத்தனை? செலவுகளை மிச்சம் பண்ணுங்க.... மாசக் கடைசியில் பிச்சை எடுக்க வேண்டியிருக்கு......"

பிச்சை என்ற வார்த்தை அவனைச் சூடேற்றியது.

"எங்க பரம்பரைக்கு அந்த நிலை வராது" என்றான்.

"அப்ப...... எங்களுக்கு வரும்ங்கறீங்களா?"

"எனக்கென்ன தெரியும்?"

"நாங்க அப்படித்தான்......" என்றவள் பார்வையின் உக்கிரம் மாறாமல் அவனைப் பார்த்தாள்.

"அதான் தெரியுமே.... நீ வேற சொல்லணுமா?" என்றான் அவன்.

"தெரிஞ்சவரு ஏன் பண்ணிக்கணும்? உங்களுக்குப் பொறுத்தமானவளா புடிச்சிருக்கிறது....."

"வாயை மூடுறீ..... ஒவ்வொண்ணுக்கும் எதிர்த்துப் பேசாதே" சட்டென்று கை ஓங்கினான்.

குடும்ப வாழ்க்கைக்கு ஆதாரம் எது? புரிந்து கொள்ளுதலா? விட்டுக் கொடுத்து அனுசரித்துப் போவதா? அப்படியா இருக்கிறான்?

வெளித் தோற்றத்தைக் கண்டு மயங்கி விட்ட மாதிரி இருந்தது. இவளுக்காக நிறையத்தான் இழந்தாயிற்று. இப்போது மட்டும் என்ன? "மன்னிச்சுக்குங்க அப்பா..... புத்தி கெட்டுப் போயிட்டேன்....." என்று காலில் விழுந்தால் அப்பா ஏற்றுக் கொள்ள மாட்டாரா?

பொருளாதார பலமோ மனித பலமோ அற்று இவன்தான் அலைய வேண்டிவரும் தெருத் தெருவாய்.....

அந்த ரீதியில் யோசிக்கும் போது, தனக்கு ஏதோ புதிய பலம் உண்டாகி விட்ட மாதிரி இருந்தது பாஸ்கரனுக்கு.

பொய்யா அது? நிஜம்தானே. அவனைத் தவிர போக்கிடம் ஏது அவளுக்கு? ஏற்றுக் கொள்வது ஒரு பக்கம் இருக்கட்டும். சம்பளத்திற்குக் கணக்கு எழுதும் தகப்பனால் எதிர்காலத்திற்கு என்ன உத்திரவாதம் அளித்து விட முடியும்.

இதெல்லாம் புரியாமல் ஏன் நடந்து கொள்கிறாள்? அவளுக்கு ரொம்பத்தான் இடம் கொடுத்து விட்டோமோ என்று தோன்றியது.

கந்தசாமி — ஆபீஸ் சிநேகிதன் — சொல்லுவான். "புதுசுன்னு ஆடிடாதே... அப்புறம் தலையில ஏறி உக்காந்துக்குவாளுக... இறக்கவே முடியாதுடா....

அவனைப் பொறுத்தவரை மனைவி என்பவள் தேவைகளை நிறைவேற்றுகிற இயந்திரம். சமைக்க, பணிவிடை செய்ய, இரவில் சேர்ந்து படுக்க......

"ச்சீ.... என்ன ஆள் இவன்" என்று தோன்றும்.

ஆனால் பிரச்னை இல்லாத வாழ்க்கை அங்கு பணியாற்றும் முப்பது பேரில் அவனுக்கு மட்டுமே இருந்தது. ஆச்சரியம் தான் இது.

"எப்படிடா சமாளிக்கிறே......"

"ரெண்டு மொத்துக் குடுத்தா வழிக்கு வர்றா... ஏன்?"

விட்டுக் கொடுத்தல் — புரிந்து கொள்ளுதல் என்பதெல்லாம் வெறும் வார்த்தைகள் தானோ? குடும்பம் நடத்த முரட்டு ஆண்மை தான் தேவையா? கந்தசாமியின் மனைவிக்காவது சொந்தம் — உறவு என்று உண்டு. வித்யாவுக்கு?

"ப்பூ...." என்று ஊதினால் விழுந்து விட மாட்டாளா?

ஆபீஸ் கலகலவென்று இருந்தது. கந்தசாமி மேனேஜரைப் போல நடித்துக் காண்பித்தான்.

பாஸ்கரன் தனது இருக்கையில் அமர, "இன்னிக்குப் பெரிசு லீவு....." என்றார்கள்.

விடுதலை உணர்வு. கட்டுகள் தளர்ந்த சந்தோஷம். மனத்தில் சுமை இல்லாத போதுதான் எதையும் ரசிக்க முடியும் போலும்.

இடைவேளையில் கந்தசாமி வந்தான். "என்ன ஒரு மாதிரி இருக்கே?"

"ஒண்ணுமில்லை....."

"அச்சோ.... அது தப்பு. மனுஷன்னா ஏதாச்சும் இருக்கணும்டா.... கலகலவென்று சிரித்தான். பாஸ்கரனுக்கு அவனைப் பார்க்கப் பொறாமையாக இருந்தது.

"வீட்ல சண்டையா?"

"விடு... சாயந்திரம் ரெண்டு முழம் பூ வாங்கிட்டுப் போனா சரியாயிருது.... அதுக்குஏன் உம்முன்னு இருக்கணும்....."

சிரிப்பு மாறாமல் கேட்டான். அவனது எளிய சித்தாந்தத்தைக் கேட்க, பாஸ்கரனுக்கும் சிரிப்பு வந்தது.

"உன்கிட்ட தனியா கொஞ்சம் பேசணும் கந்தசாமி......"

"சொல்லு..... என்ன விஷயம்?" — கந்தசாமி மூயை உறிஞ்சிக் கொண்டே கேட்டான். சுற்றிலும் 'ஹா'வென்று விரிந்த கூடம். இங்கொன்றும் அங்கொன்றுமாய் மனிதத் தலைகள். பரபரப்பு ஓய்ந்த திருப்தியில் கேண்டீன் சிப்பந்திகள் நாற்காலிகளைக் குப்புறக் கவிழ்த்துக் கொண்டிருந்தார்கள்.

பாஸ்கரனுக்குத் தான் ஆரம்பிக்க வேண்டிய இடம் என்ன என்பது இன்னும் சரியாகப் புலப்படவில்லை. எல்லாவற்றிற்கும் ஆரம்பிக்கவென்று ஓர் இடம் நிர்ணயிக்கப் பட்டிருக்கிற மாதிரியும், சரியாக அதை உணர்ந்து அடி எடுத்து வைக்கிறவர்களுக்கு மட்டுமே வெற்றி கிட்டுகிறது என்கிற மாதிரியும் அத்தருணத்தில் தோன்றியது. எதுவும்— கல்யாணம் உட்பட — சரியாக அமையாததற்குத் தனக்கு அது பற்றித் தெரிய நான் காரணமா?

"சொல்லுடா.... பேசணும்னு வந்துட்டு கம்மா இருந்தா எப்படி?"

அதையே கந்தசாமியிடம் சொன்னான். "எப்படி ஆரம்பிக்கிறதுன்னே தெரியலைடா....."

"பார்மாலிடி எல்லாம் வேணாம். எது முதல்ல வருதோ.... அப்படியே சொல்லு. ஐ யாம் ஆல்சோ மேரீட். புரிஞ்சுக்க முடியும்....."

"அதான் உன்னைத் தேடி வந்தேன்..."

பாஸ்கரனுக்குத் தன் எதிரே தடையாக இருந்த ஏதோ ஒரு முடிச்சு அவிழ்ந்து விட்ட மாதிரி இருந்தது.

முதலில் முந்தா நாள் பற்றிச் சொன்னான். கந்தசாமி கேள்வி கேட்க, நேற்றைய சம்பவங்களுக்கு வந்தான். அது போன்ற பழைய சம்பவம் நினைவுக்கு வர அங்கே தாவினான். சொல்லச் சொல்ல சுய இரக்கம் கவிழ்ந்து கொண்டே வந்தது. குரல் கம்மி, தழுதழுத்தது. "இதுக்கா நான் இவளைப் பண்ணிண்டது...... சொல்லு" ஒரு கட்டத்தில் நிறுத்தி, சிநேகிதனின் முகத்தைப் பார்த்தான்.

எதிர்பார்த்த தினுசில் கந்தசாமியின் முகம் இருக்கவில்லை. ரொம்ப சாதாரணமாக, "இதுக்கா அலட்டிக்கறே....." என்றோ, "ரெண்டு அறை விட்டா வழிக்கு வர்றா...." என்கிற மாதிரியோதான் இருந்தான்.

முரட்டு ஆள். அடி உதை சங்கதிகளில் ஈடுபாடு இருக்கக்கூடும். மனத்துக்குள் 'இவன் என்ன ஆம்பளை?' என கேலியாக நினைக்கிறானோ என்னவோ?"

பாஸ்கரனுக்கு அவனெதிரில் தான் சரிந்து போகாமல், தன் ஆண்மையை நிலை நாட்டுகிற விதமாக ஏதாவது சொல்ல வேண்டும் போல் இருந்தது.

"எனக்கென்னடா.... ஊருக்குப் போனா இன்னொரு கல்யாணம் கூட பண்ணிக்க முடியும். இவ என்ன பண்ணுவா? அதை நினைக்க மாட்டேங்கிறாளேடா....."

"என்ன....?" நிமிர்ந்து உட்கார்ந்தான் கந்தசாமி. "என்ன சொன்னே....?"

"......."

"பாவிடா..... நீ" என்று முணுமுணுத்தான். "எனக்கு உன்னை மாதிரி பேசத் தெரியாதுப்பா.... கோவம்னா மனசில உள்ளதைக் கொட்டத்தான். தெரியும். சாயங்காலத்துக்குள்ள என்னடான்னு ஆயிரும். நானே போய்ச் சமாதானமாயிடுவேன். என் சம்சாரத்துகிட்ட கேட்டுப் பாரு.... ராசான்னுதான் சொல்லுவா.... நீ என்னடா இப்படி பேசறே?"

"எப்படி.....? நீ வேணா....."

"பேசாம இரு.... மரம் விரைப்பா நிக்கிதுன்னா வேர் பலமா ஊன்றிக்கிச்சுன்னு அர்த்தம். அன்பு இருக்கிறவதான் சண்டை போட முடியும். நீ என்ன அஸ்திவாரத்தையே ஆட்டம் காண வைக்கிறே..."

"............"

"சண்டை போடறவளை விட சிரிக்கிறவதான் ஆபத்தானவ.... எப்பவும் சிரிச்சுக்கிட்டே யாரால இருக்க முடியும்? வேஷமில்லையா அது?.... எனக்கு என்னமோ உங்களுக்குள்ளே என்ன பிரச்னைன்னே இன்னும் புரியலை. ஒருநாள் வீட்டுக்கு வர்றேன். விவரமா ரெண்டு பேரு கிட்டயும் பேசிக்கலாம். அதுக்கு முந்தி இந்த மாதிரி நினைப்பெல்லாம் விரட்டிரணும்... என்ன?" கந்தசாமி பேசப் பேச, பாஸ்கரன் தலைகுனிந்து கேட்டுக் கொண்டிருந்தான்.

"ஸார்... நேரமாகுமா?" அவர்கள் புறப்பட வேண்டியதைச் சிப்பந்தி உணர்த்த, "இதோ ஆச்சுப்பா" என கந்தசாமி எழுந்தான். நின்ற தினுசில் உயரமாகத் தெரிந்தான். உடம்பில் மட்டுமல்ல என நினைத்துக் கொண்டான் பாஸ்கரன்.

"முன்னெல்லாம் பேச்சாளர் கொடுக்கிற தேதிலதான் கூட்டம் போட்டோம்!"

"இப்பல்லாம்?"

"கூட்டத்துக்கு ஆட்களை அனுப்புற காண்ட்ராக்டர் சொல்ற தேதிலதான் கூட்டம்!"

— மேல்குந்தை வாசு.



# அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ணிய ஸ்மரண சமிதி

அலுவலகம்: D-76, மூன்றாவது குறுக்கு தெரு,
ஸ்ரீநகர் காலனி, கும்பகோணம்-612 001
தமிழ்நாடு. போன்:P.P. 20123

## கும்பகோணம் இராஜவேத காவ்ய பாடசாலையின் ஒரு சிறிய அபிவிருத்தி அறிக்கை

(ஸ்தாபிதம் 1542)

| வருடம் | அத்யாபகர்களின் எண்ணிக்கை | அத்யாபகர்களுக்கு சம்பளம் | வித்யார்த்திகளின் எண்ணிக்கை |
|---|---|---|---|
| | | ரூ.பை. | |
| 1965—66 | 5 | 60/— | 20 |
| 1966—67 | 4 | 100/- | 20 |
| 1967—68 | 4 | 100/- | 24 |
| 1968—69 | 4 | 100/- | 26 |
| 1969—70 | 4 | 125/- | 30 |
| 1970—71 | 4 | 130/- | 34 |
| 1971—72 | 4 | 135/- | 35 |
| 1972—73 | 4 | 140/- | 42 |
| 1973—74 | 4 | 180/- | 40 |
| 1974—75 | 5 | 190/- | 49 |
| 1975—76 | 7 | 200/- | 50 |
| 1976—77 | 7 | 200/- | 57 |
| 1977—78 | 7 | 200/- | 57 |
| 1978—79 | 7 | 350/- | 55 |
| 1979—80 | 7 | 500/- | 51 |
| 1980—81 | 8 | 500/- | 54 |
| 1981—82 | 9 | 550/- | 65 |
| 1982—83 | 9 | 650/- | 72 |
| 1983—84 | 9 | 750/- | 64 |
| 1984—85 | 10 | 800/- | 64 |
| 1985—86 | 8 | 1000/- | 72 |
| 1986—87 | 8 | 1050/- | 62 |
| 1987—88 | 9 | 1100/- | 66 |
| ஜூலை 1987—இல் இருந்து | 10 | — | 84 |
| 1988 | 11 | — | 90 |

குறிப்பு I ஜூலை 1987 லிருந்து வேத விற்பன்னர்களுக்கும், மற்றும் காவ்ய அத்யாபகர்களுக்கும் அவர்களுடைய கல்விக்குத் தகுந்தபடி புதிய சம்பள விகிதங்கள் கொடுக்கப்படுகின்றன.

| | |
|---|---|
| 1) அ) ரிக்வேதம் அல்லது யஜுர் வேதத்தில் கிரமாந்தம்<br>ஆ) சாம வேதத்தில் பதாந்தம்<br>இ) ஸம்ஸ்க்ருத சிரோன்மணியுடன் ஹிந்தியிலும் தேர்ச்சி பெற்றவர்கள் | ரூ. 1,000 - 100 - 1,500 |
| 2) அ) ரிக்வேதம் அல்லது யஜுர் வேதத்தில் கனாந்தம்<br>ஆ) சாமவேதத்தில் பதாந்தத்துடன், அஷ்டபிராம்மண மூலமும்<br>இ) முறையான வேத அத்யானத்துடன் ஏதாவது ஒரு கலையில் (or) மொழியில் பட்டப்படிப்பு | ரூ. 1,250 - 100 - 1,750 |
| 3) ரிக் (or) யஜுர் வேதத்தில் கிரமாந்தமும், சலக்ஷண ஸாமவேதமும் இவற்றுடன் ' பிரஸ்தானத்ரயம், வேதபாஷ்யம் (or) வியாகர்ண, வேதாந்த, மீமாம்சா, சிரோன்மணி முதலியவை. | ரூ. 1,500 - 100 - 2,000 |

குறிப்பு II ஒவ்வொருவருக்கும் அடிப்படை சம்பளத்தில் 10% வீட்டு வாடகைப் படியும், ஆசிரியர் குடும்பநல உதவிக்காகவும் அளிக்கப்படுகிறது.

குறிப்பு III ஒவ்வொரு வேத அத்யாபகர்களும் ரூ. 5,000/— க்கு L.I.C. பாலிசி எடுத்துக் கொண்டுள்ளனர். அதற்கான கட்டணத் தொகை (Premium) அளிக்கப்படுகிறது.

குறிப்பு IV ஒவ்வொரு வேத மற்றும் காவ்ய அத்யாபகர்களுக்கும், அவர்கள் வகுப்பில் படிக்கும் மாணவர்களின் முன்னேற்றத்திற்குத் தக்கபடி குறைந்தது ரூ 750/- (Cash Incentive) ஒவ்வொரு வருடமும் தரப்படுகிறது.

குறிப்பு V 1988-89-ல் 15 வித்யார்த்திகளும், இரண்டுவேத, காவ்ய அத்யாபகர்களும் சேர்த்துக் கொள்ள திட்டமிடப்பட்டுள்ளது.

குறிப்பு VI ஒவ்வொரு வேத, காவ்ய அத்யாபகர்களுக்கு அவர்கள் ஓய்வு பெற்ற பிறகு, கடைசியாக ஓய்வு பெறும் போது வாங்கிய சம்பளத்தில் 50%-ம், அவர்களுக்குபிறகு அவர்களது மனைவிக்கு 25% Pension ஆக மாதந்தோறும் வழங்க திட்டமிடப்பட்டுள்ளது.

குறிப்பு VII மேற்கூறிய காவ்ய, வேத அத்யாபிகர்கள் தவிர, தமிழ், ஆங்கிலம், கணக்கு, சரீரப் பயிற்சி முதலியவைகளுக்கு 6 ஆசிரியர்கள் பகுதி நேரப் பணி புரிகின்றனர்.

## மாணவர்களுக்கான ஸம்பாவனைகள்:

தங்கள் அத்யயனத்தை பூர்த்தி செய்து கொண்டு செல்லும் மாணவர்களுக்கு கீழ்க் கண்ட விபரப்படி ஸம்பாவனை அளிக்கப்படுகிறது.

| படிப்பின் பெயர் | ரிக்வேதம் | யஜுர்வேதம் | ஸாமவேதம் |
|---|---|---|---|
| | ரூ-பை | ரூ-பை | ரூ-பை |
| அ) ஸம்ஹிதாந்தம் | 3,500-00 | 3,500-00 | 3,500-00 |
| ஆ) பதாந்தம் | 4,500-00 | 4,500-00 | 4,500-00 |
| இ) க்ரமாந்தம் | 5,500-00 | 5,500-00 | — |
| ஈ) கனாந்தம் | 6,500-00 | 6,500-00 | — |
| உ) சாந்தோக்யாந்தம் | — | — | 5,500-00 |
| ஊ) அஷ்டப்ராம்மணாந்தம் | — | — | 6,500-00 |



• ஸ்னாப்பி: ஏ. வி. சௌகரியத்தில் அதிவேக உணவு.

**"சூ**டா என்ன இருக்குப்பா...?'' என்று சர்வரிடம் விசாரித்து, அவர் 'இட்லி, வடை, தோசை, ஸ்பெஷல் தோசை, ஸ்பெஷல் மசாலா, பூரி, சப்பாத்தி, பொங்கல், சோலே பத்தூரா,' என்று அடுக்குவதைக் கேட்டு விட்டு, சாவகாசமாக, முதலில் ஒரு ஸெட் குலோப் ஜாமூன், இட்லி — சாம்பார் கொண்டு வா'' என்று ஆர்டர் கொடுத்து விட்டு... சராசரி சென்னைவாசி, இப்படி ஒரு மாலைப் பொழுது முழுவதையுமே ஓர் ஓட்டலில் கழித்த காலம் மலையேறி விட்டது.

இப்போது எங்கும் எதிலும் அவசரம். அண்ணா சாலையில் 'வி' 'பஸ்'ஸைப் பிடித்தாக வேண்டும். தேனாம்பேட்டையில் மனைவியின் ஆபீசில் இறங்கி, அவளை அழைத்துக் கொண்டு ஆட்டோ பிடித்து, 6.45 முதல் 7.00 மணிவரை நேரம் ஒதுக்கியுள்ள லேடி டாக்டரைப் பார்க்க வேண்டும்; அங்கிருந்து மைலாப்பூர் போய், கொஞ்சம் ஷாப்பிங் வேலையை முடித்துக் கொண்டு, இரவு ஒன்பது மணி டீ. வி. நிகழ்ச்சிக்கு முன்னால் அண்ணா நகரிலுள்ள வீட்டுக்குப் போய்ச் சேர வேண்டும். வாயும் வயிறுமாய் இருக்கிறவளை ஒன்பது மணிவரை வயிற்றைக் காயப் போடச் செய்யக் கூடாது. அதனால், வழியில் ஏதேனும் ஒரு 'ஃபாஸ்ட் புட் ஜாயின்ட்'க்குப் போய் இரண்டு நிமிடங்கள் க்யூவில் நின்று டோக்கன் பெற்று, மூன்று நிமிடங்கள் காத்திருந்து ஆவி பறக்கும் இட்லி ஒரு கையிலும் காப்பி ஒரு கையிலும் வாங்கிக் கொண்டு, சுவரிலிருந்து நீட்டிக் கொண்டிருக்கும் காலில்லாத மேஜையிலோ கவுண்டரிலோ வைத்துக் கொண்டு, நின்றபடியே சாப்பிட்டுவிட்டு, எட்டரை நிமிடங்களாக 'வெய்டிங்'கில் இருக்கும் ஆட்டோவில் ஏறி, 6.40—க்கு, லேடி டாக்டரின் ஏ.ஸி. வெயிட்டிங் ரூமில் ரிஸப்ஷனிஸ்டிடம் வருகைப் பதிவு செய்ய வேண்டும்.

இப்படி எதிலும் வேகம் எப்போதும் வேகம் என்று ஓடக் கூடிய இந்த அவசர யுகத்தினையொட்டி முளைத்துள்ள அதிவேக (வேகவைத்த!) உணவு பரிமாறும் நிலையங்கள் சிலவற்றை நேரில் சென்று பார்த்தோம்.

**உ**ண்மையில் இந்த அதிவேக உணவகங்களின் ஆரம்ப வேர்கள் வீதியோரங்களில் ஆச்சிகள் நடத்திவரும் இட்லி, இடியாப்பக் கடைகளும், 'சந்துபுகாரி' என்று செல்லமாக அழைக்கப்படும் தள்ளுவண்டி உணவகங்களும்தான். பட்டாணி சுண்டல் முதல் முட்டை பரோட்டா வரை ஒவ்வொரு அயிட்

• ராயச்சத்திரம் கடையில்......



டத்துக்கும் பெயர் போன ஒரு 'ஸ்பெஷல்' தள்ளு வண்டி இருக்கிறது, சென்னை நகரில்.

தியாகராய நகரில், வாணி மகால் வளைவில் சுமார் பத்து வருடமாக மிளகாய் பஜ்ஜி, மசால் வடை, வெஜிடபிள் போண்டா, வியாபாரம் செய்கிறார் ராமச்சந்திரன். சொந்த ஊர் ஷோரனூர். ஓட்டலில் இருந்த அனுபவம் கைகொடுக்க, தைரியமாக ஆரம்பித்தார்.

"எல்லாம் ரீஃபைன்ட் ஆயிலில்தான் தயாரிக்கிறேன். மசால் வடைதான் அதிகமாகச் செலவாகிறது. (எல்லாம் நாற்பது பைசா!) நடுவில், போலீஸ் கெடுபிடி அதிகமாயிருந்ததால் வியாபாரத்தைச் சற்று நிறுத்தியிருந்தேன்."




• கானபி: நின்றவாக்கில் சாப்பிட்டுவிட்டு நடையைக் கட்டலாம்.

"என்ன கெடுபிடி?"

"போக்குவரத்துக்கு இடைஞ்சல் என்று சொல்லி அபராதம் போடுவாங்க. இங்கே கடை நடத்தக் கூடாதுன்னு சொல்லுவாங்க."

"அப்போ என்ன செய்வீங்க?"

"நாற்பதோ ஐம்பதோ ரூபாய் கோர்ட்டுல அபராதம் கட்டிட்டு மறுபடி வந்து வியாபாரம் பண்ணுவேன். வேறே தொழில் தெரியலியே, என்ன செய்கிறது? குடும்பம் நடந்தாகணும்."

# அவசர யுகத்துக்கு அதிவேக உணவு!

ராமச்சந்திரனின் கடையில் மாலை நாலு மணிக்குத் தொடங்கி இரவு பத்து மணி வரை மிகச் சுறுசுறுப்பாக வியாபாரம் நடக்கிறது. இரவுச் சாப்பாட்டையே இங்கே முடித்துக் கொள்பவர்கள் உண்டு!

"இவர்கிட்டே சரக்கு நல்லா இருக்குங்க; விலையும் அதிகம் இல்லை" என்றார் வாடிக்கையாளர் தங்கவேலு.

"லைசென்ஸ் மாதிரி ஏதானும் வச்சிட்டாப் பரவாயில்லை. கட்டிட்டு நிம்மதியா பொழைப்பு நடத்தலாம்!" என்கிறார் ராமச்சந்திரன். நேரம் கிடைக்கிற போது இவரது தம்பிகள் இரண்டு பேர் வியாபாரத்தில் உதவுகிறார்கள்.

இரவு வியாபாரம் முடிந்ததும் வண்டியைக் கோட்டூர்புரத்திலுள்ள வீட்டுக்குத் தள்ளிக் கொண்டு போய்விடுகிறார். ஞாயிற்றுக் கிழமை விடுமுறை.

"ஏன்?"

"டி. வி. வந்தப்புறம் சாயந்திரம் கூட்டம் இல்லே!"

**பி**ட்ஸா, பர்கர், ஃப்ராங்கி — புரியாத மொழிபோல் இருக்கிறதல்லவா! ஆமாம், இவை எல்லாமே அயல்நாட்டு உணவு வகை

களின் பெயர்கள். பிட்ஸா — இத்தாலிய உணவு — பர்கர் அமெரிக்காவின் இட்லி என்று சொல்லலாம். ஃப்ராங்கி — காய்கறிகளை இடையில் வைத்துச் செய்த சப்பாத்தி போன்ற சமாசாரம்! — இந்த வகை உணவுகளை மேல் மட்டத்தினருக்கும், இளம் சினிமா நட்சத்திரங்களுக்கும், கல்லூரி இளவட்டங்களுக்கும் 'சுடச்சுட' வழங்க என்றே சில குளுகுளு உணவகங்கள் இருக்கின்றன.

இவற்றுள் ஒன்று ஸ்னாப்பி. இங்கே பரிமாறப்படும் பிட்ஸாவுக்குள் வைக்கக் குடைமிளகாய் மேற்கு வங்கத்திலிருந்து வரவழைக்கப்படுகிறதாம். விலை: கிலோ 180 ரூபாய்! இங்கு பரிமாறப்படும் உணவு வகைகளின் விலையும் அதற்கேற்பத்தான் இருக்கிறது.

ஆனால், கேட்கும் உணவு சுடச்சுட, வெகு சீக்கிரமாய்த் தரப்படுகிறது ஸ்னாப்பியில் — 'Baine Marie' என்ற ஒரு வகை சூடு காக்கும் பாத்திரத்தில் உணவு வகைகளைத் தயாராக வைத்திருப்பதால் உடனே உடனே வழங்க முடிகிறது.

"ஃபாஸ்ட் ஃபுட் இங்கே இப்போதுதான் ஆரம்பமாகியிருக்கிறது. அதனால் இன்னும் சில வருடங்கள் ஆகும் சூடு பிடிக்க. பம்பாய், தில்லி மாதிரி சென்னைவாசிகள் வெளியே ஓட்டலுக்கு ஜாலியாகப் போய்ச் சாப்பிடுவதை ஒரு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்ளவில்லை!" என்றார் ஸ்னாப்பியின் மேலாளர் அலி.

'கானபி'யில் (லஸ் சர்ச் ரோடு) இருந்த மாலை நேரக் கூட்டம் அலியின் கூற்றைப் பொய்யாக்கியது.

மத்தியதர, மேல் மத்திய குடும்பங்களிலிருந்து, பல தம்பதிகள், இளைஞர்கள், யுவதிகள் 'மொசுக்கி'க் கொண்டிருந்தார்கள். சிலருக்கு இந்த இடம் பிடித்திருந்தது. சிலருக்கு இங்கே உணவு பிடித்திருந்தது. இன்னும் சிலருக்கு அருகே உள்ள ஆஞ்சநேயர் கோயில் தரிசனம் முடிந்த கையோடு 'பிரசாதம்' வாங்கிச் சாப்பிடுகிற இடமாக இருக்கிறது 'கானபி'!

கமல் மனைவி சரிகா, அபஸ்வரம் ராம்ஜி போன்ற புள்ளிகள் வருவதுண்டாம்.

இட்லி, (ஒரு பிளேட்டுக்கு மூன்று இட்லி) தோசை, சப்பாத்தியுடன், பேல்பூரி முதலிய வட இந்திய ஐட்டங்களும் இங்கே உண்டு. (விலை சுமார் 3 ரூபாயிலிருந்து 3.75 வரை.)

"ஆர்டர் பண்ணி எத்தனை செகண்டுகளில் கொடுப்பீர்கள்?"

"அதிகபட்சம் 180 செகண்டுகள் — அதாவது மூன்று நிமிடங்கள்!"

தங்கு தடையின்றி உணவு சப்ளை செய்யப் பாத்திரம், தட்டுகள் கழுவும் இயந்திரம் வாங்கிப் போட்டிருக்கிறார்கள். மிகச் சிறிய இடத்தில் மிக நேர்த்தியாகச் செயல்படுகிறார்கள்.

"இந்த பிஸினஸுக்கு எதிர்காலம் எப்படி இருக்கும்?"

"பிரமாதமாக இருக்கும்!" என்கிறார் கானபியைச் சேர்ந்த சுரேஷ்குமார்.

**நி**ஸ்சய், அருண் என்ற இரண்டு பட்டதாரி இளைஞர்கள் படு தைரியமாக ஆரம்பித்து நடத்தும் 'கிச்சன் — 12' மந்தைவெளியில் இருக்கிறது.

"எப்படி ஆரம்பித்தீர்கள்?"

"எல்லாம் நண்பர்களின் ஊக்கம், உற்சாகம்தான். முதல் வருடம் கிடைத்த வெற்றியில், இரண்டாவது வருடமே மாடியில் 'திருப்தி' என்ற ஏர்கண்டிஷன்ட் ரெஸ்ட்டாரன்ட் திறந்துவிட்டோம்... பெசன்ட் நகர், ஜெயின் காலேஜ் சாலையில் எல்லாம் இது மாதிரி ஆரம்பிக்க நண்பர்களைத் தூண்டினோம்."

"பிற மாவட்டங்களில் உள்ள இளைஞர்களை இதுபோல் ஆரம்பிக்கச் சொல்லலாமா — தைரியமாக?"

"தாராளமாக! நியாயமான வழியில் நிறையவே சம்பாதிக்கலாம். தேவையானவை: கார்ப்பரேஷன் அல்லது முனிசிபாலிடி லைசென்ஸ்; இரண்டாவது, மனோதிடம். மூன்றாவது ஓர் அட்வைஸ்: குடியிருப்புப் பகுதிகளில் ஆரம்பிக்காதீர்கள்!"

**நா**ஸே NAESEY என்று அழைக்கப்படும், பட்டதாரி இளைஞர்களின் சுயவேலை வாய்ப்பு அமைப்பு, 1975 — இல் பல இடங்களில் பெட்டிக் கடை (பங்க்) வைத்துக் கொடுக்க உதவியது. படித்த இளைஞர்கள் பலர், இதன் ஆதரவில் பல இடங்களில் இதைப் பயன்படுத்திக் கொண்டனர். ஆனால் — 1985 — இல், நெடுஞ்சாலைப் பராமரிப்புத் துறையினர், சாலைகளில் கடைகள் வைப்பதை ஆட்சேபித்து, அவற்றை அப்புறப்படுத்தினர்.

'நாஸே' சுப்ரீம் கோர்ட்டில் வழக்குப் போட்டு, தடை வாங்கியபின், சென்னையில் சுமார் நூறு கடைகள் தற்போது நடக்கின்றன. மாநிலத்தின் பிற மாவட்டங்களில், சுமார் அறுநூறு கடைகள் இயங்குகின்றன.

'ஃபாஸ்ட் ஃபுட்' யுகமாக மாறிவரும் இந்நாளில், காப்பி, டீ, பிஸ்கட் மட்டும் விற்கும் நாஸே கடைகள், வடை—போண்டா போன்ற சிற்றுண்டிகளையும் விற்றால் என்ன?

மாநகராட்சி சுகாதார அதிகாரி அனுமதிப்பதில்லையாம். அதற்கான சுகாதார வசதிகள் இல்லை என்பது காரணமாம். அனுமதித்தால் நல்ல விற்பனை ஆகும் என்பதில் சந்தேகமில்லை என்கின்றனர் இந்தப் பட்டதாரி இளைஞர்கள்.

**க**டைசியாக ஒரு செய்தி:

கோவை அன்னபூர்ணா உணவு நிலையத்தினர், சென்னையில் இருபத்தைந்து அதிவேக உணவகங்கள் திறக்கப் போவதாகத் தெரிகிறது. பெரும்பாலும் வெளிநாட்டு உபகரணங்களுடன், கைபடாத, சுத்தமான, அதிவேக நவீன உணவு கிடைக்குமாம் இங்கே.

— சாருகேசி

வண்ணப்படங்கள்: யோகா



# மணவாழ்விலே குளுமை...

# அருண்

## ஐஸ்க்ரீம்

## தருமே இனிமை!

**திருமணம் மற்றும் பார்ட்டிகளில்**
**சுவைத்து மகிழச் சிறந்தது.**

பரவசமூட்டும் எங்களின் இதர வகைகளில்
சுவை கூட்டும் அறிமுகம்-

- **கிங் கேஸர்**
- **ஜூஸி காஷி**

உங்கள் தேவைகளுக்கு அருகிலுள்ள
எங்கள் நிலையத்தை அணுகவும்.

சென்னை மற்றும்
தமிழகமெங்கும் அருண் ஐஸ்க்ரீம் பார்லர்கள் உள்ளன.

அருண் ஐஸ்க்ரீம்ஸ்—
தமிழகத்தின் முன்னணி விற்பனையாளர்.



Imageads - 2610

# பொன்னியின் செல்வன்






## அத்தியாயம் 32
## பிரம்மாவின் தலை

வந்தியத்தேவன் குடந்தை ஜோதிடரின் வீட்டுக்குள் இரண்டாம் முறையாகப் பிரவேசித்த போது அவனுடைய உள்ளத்தில் ஓர் அதிசயமான இன்ப உணர்ச்சி உண்டாயிற்று. அந்தச் சிறிய வீட்டுக்குள்ளேதான் முதன் முதலாக அவன் இளைய பிராட்டி குந்தவையைப் பார்த்தான். அவளுடைய செந்தாமரை வதனத்தையும், வியப்பினால் விரிந்த கரிய பெரிய கண்களையும் பார்த்துத் திகைத்து நின்றான். அவளுடைய தேனினுமினிய தீங்குரல் அவன் செவியில் விழுந்ததும் அங்கேதான். இந்த நினைவுகள் எல்லாம் அலை மோதிக் கொண்டு அவன் உள்ளத்தில் பொங்கி வந்தன. அவற்றினால் அவன் செவிகள் இனித்தன; உள்ளம் இனித்தது; உடல் முழுதுமே இனித்துச் சிலிர்த்தது!

சோதிடர் அப்போதுதான் மாலை வேளைப் பூஜைக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். இவனைப் பார்த்ததும், "வா, அப்பனே, வா! வாணர் குலத்து வல்லத்தரையன்தானே?" என்றார்.

"ஆம், சோதிடரே! உம் ஜோசியம் முன் பின்னாக இருந்தாலும், உம்முடைய ஞாபக சக்தி பிரமாதம்!" என்றான் வந்தியத்தேவன்.

"தம்பி! சோதிட சாஸ்திரம் பயில்வதற்கு ஞாபக சக்தி மிக அவசியம். கிரகங்கள், நட்சத்திரங்கள், தசைகள், புக்திகள், யோகங்கள், — இவை லட்சம் விதமான சேர்க்கை உள்ளவை. அவ்வளவையும் மனத்தில் வைத்துக் கொண்டு, வருஷம், மாதம், நாள், நாழிகை, வினாடி, ஒரு வினாடியில் நூற்றில் ஒரு பங்கு நேரம், — இவ்வளவையும் கணக்கிட்டுப் பார்த்தல்லவா சொல்லவேண்டும்! போகட்டும்; என் ஜோசியம் முன் பின்னாக இருந்தாலும் என்றாயே? அதன் பொருள் என்ன? நான் உனக்குச் சொன்னது ஒன்றும் பலிக்கவில்லையா?"

"அதையும் உங்கள் ஜோசியத்திலேயே கண்டுபிடித்துக் கொள்ள வழி இல்லையா?"

"உண்டு, உண்டு! ஜோசியத்தினாலும் கண்டுபிடிக்கலாம்; ஊகத்தினாலும் கண்டுபிடிக்கலாம். உனக்கு நான் கூறியவை பலித்துத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் நீ திரும்பவும் இந்தக் குடிசைக்குள் வரு

அமரர் கல்கி

வாயா?''

''ஆமாம்; ஆமாம். உம்முடைய சோதிடம் பலிக்கத்தான் செய்தது.''

''அப்படிச் சொல்லு! எந்தவிதத்தில் பலித்தது, அப்பனே?''

''நீர் எனக்குச் சொன்னது அப்படியே பலித்தது. 'நீ போகிற காரியம் நடந்தால் நடக்கும்; நடக்கா விட்டால் நடக்காது' என்றீர். அந்தப்படியே நடந்தது. 'நடந்தது' என்று நான் சொல்வது கூடப் பிசகு. என்னைக் கண்டவுடனேயே ஓட்டம் பிடித்து ஓடிற்று!''

''தம்பி! நீ பெரிய வேடிக்கைக்காரனாயிருக்கிறாய்!'' -

''உண்மையான வார்த்தை. நான் வேடிக்கைக்காரன்தான்; அத்துடன் கொஞ்சம் கோபக்காரன்.''

''இந்தக் குடிசைக்குள் வரும்போது கோபத்தை வெளியில் மூட்டை கட்டி வைத்து விட்டு வர வேண்டும்.''

''அப்படிச் செய்யலாம் என்று தான் பார்த்தேன். ஆனால் உம்முடைய சீடனை வீட்டு வாசலில் காணவில்லை. கோப மூட்டையைத் திண்ணையில் வைத்தால் யாராவது அடித்துக் கொண்டு போய் விட்டால் என்ன செய்கிறது என்று உள்ளே கொண்டு வந்து விட்டேன். உம்முடைய சீடன் எங்கே, சோதிடரே! போன தடவை அவன் என்னை வாசலில் தடுத்து நிறுத்தப் பார்த்தது அப்படியே என் நினைவில் இருக்கிறது!''

''இன்றைக்கு ஐப்பசி அமாவாசை அல்லவா? அதற்காக அவன் கொள்ளிடக் கரைக்குப் போயிருப்பான்.''

''அமாவாசைக்கும் கொள்ளிடக் கரைக்கும் என்ன சம்பந்தம்?''

''கொள்ளிடக் கரையில் காளாமுகர்களின் மகா சங்கம் இன்று நடைபெறுகிறது. என் சீடன் காளாமுகத்தைச் சேர்ந்தவன்.''

''சோதிடரே! நான் சைவ மதத்தையே விட்டு விடலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.''

''விட்டு விட்டு......?''

''உமது சிநேகிதர் ஆழ்வார்க்கடியார் நம்பி இருக்கிறாரே......''

''திருமலையைச் சொல்கிறாயாக்கும்!''

''ஆம்; அவரிடம் தீட்சை பெற்று உடம்பெல்லாம் நாமத்தைப் போட்டுக் கொண்டு வீர வைஷ்ணவனாகி விடலாம் என்று உத்தேசிக்கிறேன்.''

''அது ஏன் அப்படி?''

''காளாமுக சைவர்கள் சிலரைப் பார்த்தேன். இங்கே வருகிற வழியிலே கூடப் பார்த்தேன். அவர்களையும் அவர்கள் வைத்திருக்கும் மண்டை ஓடுகளையும் பார்த்த பிறகு சைவத்தை விட்டு விடலாம் என்று தோன்றுகிறது.''

''தம்பி! எத்தனையோ போர்க்களங்களைப் பார்த்திருக்கும் உனக்கு மண்டை ஓடுகளைக் கண்டு என்ன பயம்?''

''பயம் ஒன்றுமில்லை; அருவருப்புத்தான். போர்க்களத்தில் பகைவர்களைக் கொல்வதற்கும் மண்டை ஓடுகளை மாலையாகப் போட்டுக் கொள்வதற்கும் என்ன சம்பந்தம்?''

''உன்னுடைய எஜமானர் ஆதித்த கரிகாலர் வீரபாண்டியனுடைய தலையை வெட்டி எடுத்துக் கொண்டு வந்து ஊர்வலம் விடவில்லையா?''

''அவர் ஏதோ சபதம் செய்திருந்த படியால் அவ்விதம் செய்தார். அதற்காகப் பிறகு எவ்வளவோ வருத்தப் பட்டார். அவர் கூட மண்டை ஓட்டை மாலையாகப் போட்டுக் கொள்ள வில்லை; கையிலும் எடுத்துக் கொண்டு திரியவில்லையே? காளாமுகர்கள் எதற்காக அப்படிச் செய்கிறார்கள்?''

''வாழ்க்கை அநித்தியம் என்பதை மறந்து விடாமலிருப்பதற்காக அவர்கள் அவ்வாறு செய்கிறார்கள். நீயும் நானும் திருநீறு பூசிக்கொள்கிறோமே, அது மட்டும் என்ன? இந்த மனித உடம்பு நிலையானது அல்ல, ஒரு நாள் சாம்பராகப் போகிறதென்பதை மறந்து விடாமலிருப்பதற்குத்தானே திருநீறு பூசிக் கொள்கிறோம்?''

''மனித தேகந்தான் அநித்தியம் என்பது சரிதான். இது எரிந்து சாம்பராகும்; அல்லது மண்ணோடு மண்ணாகும். சிவபெருமானுடைய திருமேனி அப்படியல்லவே! பரமசிவன் ஏன் கையில் மண்டை ஓட்டை வைத்திருக்கிறார்?''

''தம்பி! சிவபெருமானுடைய

கையில் உள்ள மண்டை ஓடு ஆணவத்தைக் குறிக்கிறது. ஆணவத்தை வென்றால் ஆனந்த நிலை ஏற்படும் என்பதைக் காட்டுகிறது. சிவபெருமான் கையில் மண்டை ஓட்டுடன் ஆனந்த நடனம் செய்கிறார் அல்லவா?''

''மண்டை ஓடு எப்படி ஆணவத்தைக் குறிக்கும், எனக்குத் தெரியவில்லையே?''

''உனக்குத் தெரியாதது இன்னும் எவ்வளவோ இருக்கிறது, தம்பி! மண்டை ஓடு ஆணவத்தைக் குறிப்பது எப்படி என்பதை மட்டும் இப்போது தெரிந்து கொள். பிரம்ம தேவனும் திருமாலும் ஒரு சமயம் கர்வம் கொண்டார்கள். 'நான் பெரியவன்; நான் தான் பெரியவன்' என்று சண்டையிட்டார்கள். சிவன் அவர்களுக்கு நடுவில் வந்தார். 'என்னுடைய சிரசை ஒருவரும் என்னுடைய பாதத்தை ஒருவரும் கண்டுபிடித்துக் கொண்டு வாருங்கள். யார் பார்த்துவிட்டு முதலில் வருகிறாரோ, அவர்தான் உங்களில் பெரியவர்' என்றார். மகா விஷ்ணு வராக உருவங் கொண்டு சிவனுடைய பாதங்களைப் பார்ப்பதற்குப் பூமியைக் குடைந்து கொண்டு சென்றார். பிரம்மா அன்னப் பறவையின் உருக் கொண்டு வானத்தில் பறந்து சென்றார். திருமால் திரும்பி வந்து சிவனுடைய அடியைக் காண முடியவில்லை என்று உண்மையை ஒப்புக் கொண்டார். பிரம்மா திரும்பி வந்து சிவனுடைய முடியைப் பார்த்து விட்டதாகப் பொய் சொன்னார்! அப்போது சிவன் பிரம்மாவுக்கிருந்த ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளி எடுத்து அவரைத் தண்டித்தார். ஆணவம் காரணமாகப் பிரம்மா சண்டையிட்டுப் பொய் சொன்னபடியால் அவருடைய தலை ஆணவத்துக்குச் சின்னமாயிற்று...''

வந்தியத்தேவன் எதையோ நினைத்துக் கொண்டவன் போல் இடி இடி என்று சிரித்தான்.

''என்னத்தைக் கண்டு இப்படிச் சிரிக்கிறாய், தம்பி!''

''ஒன்றையும்கண்டுசிரிக்கவில்லை. ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அதனால் சிரித்தேன்.''

''அது என்ன விஷயம்? இரகசியம் ஒன்றுமில்லையே?''

''இரகசியம் என்ன? பிரம்மாவைத தண்டிப்பது போல் என்னையும் தண்டிப்பதாயிருந்தால், குறைந்த பட்சம், பதினாயிரம் தலையாவது எனக்கு இருந்தால்தான் சரிக்கட்டி வரும்! அதை எண்ணித்தான் சிரித்தேன்.''

''அத்தனை பொய்கள் சொல்லியிருக்கிறாயாக்கும்!''

''ஆம், சோதிடரே! அது என் சாதக விசேஷம் போலிருக்கிறது. பொன்னியின் செல்வரைச் சந்தித்த பிறகு உண்மையே சொல்வதென்று தீர்மானித்திருந்தேன். ஒரு தடவை ஒரு முக்கியமான உண்மையையும் சொன்னேன். அதைக் கேட்டவர்கள் நகைத்தார்கள்: ஒருவரும் நம்பவில்லை!''

''ஆம்; தம்பி! காலம் அப்படிக் கெட்டுப்போய்விட்டது. இந்த நாளில் பொய்யையே ஜனங்கள் நம்புவதில்லை; உண்மையை எப்படி நம்பப் போகிறார்கள்?''

''உம்முடையஜோதிடத்தின்கதியும் அப்படித்தானாக்கும்! சோதிடரே! இளவரசர் அருள்மொழிவர்மரைப் பற்றி நீர் கூறியது நினைவிருக்கிறதா? வானத்திலேவடதிசை அடிவாரத்தில் நிலைத்து நின்று ஒளிரும் துருவ நட்சத்திரம் போன்றவர் பொன்னியின் செல்வர் என்று நீர் சொல்லவில்லையா?''

''சொன்னேன்: அதனால் என்ன?''

''அவரைப் பற்றிய செய்தியை நீர் கேள்விப்படவில்லையா?''

''கேள்விப்படாமல் எப்படி இருக்க முடியும்? நாடு நகரமெல்லாம் அதே பேச்சாகத்தானே இருக்கிறது?''

''துருவ நட்சத்திரம் கடலில் மூழ்கி விட்டதென்று நீர் கேள்விப்பட்டதுண்டா?''

''துருவ நட்சத்திரம் கடலில் மூழ்காது. ஆனால் அந்த நிலைகுலையா நட்சத்திரத்தையும் மேகங்கள் சில சமயம் மறைக்கலாம் அல்லவா? இன்றைக்குக் கூட வடதிசையில் மேகங்கள் குமுறுகின்றன. இன்று இரவு நீர் எவ்வளவு முயன்றாலும் துருவ நட்சத்திரத்தைக்

காண முடியாது. அதனால் அந்த நட்சத்திரம் இல்லாமற் போய் விடுமா?''

''அப்படியா சொல்கிறீர்? பொன்னியின் செல்வரைப் பற்றிய உண்மையான செய்தி ஏதாவது உமக்குத் தெரியுமா?''

''எனக்குஎப்படித்தெரியும்? நீதான் அவருடன் கடைசியாகக் கடலில் குதித்தாய் என்று பேச்சாயிருக்கிறது. தெரிந்திருந்தால், உனக்கு அல்லவா தெரிந்திருக்க வேண்டும்? உன்னைக் கேட்கலாம் என்று எண்ணியிருந்தேன்.''

வந்தியத்தேவன் பேச்சை மாற்ற விரும்பி, ''சோதிடரே! வால் நட்சத்திரம் இப்போது எப்படி இருக்கிறது?'' என்று வினவினான்.

''மிக மிக நீளமாகப் பின்னிரவு நேரங்களில் தெரிகிறது. இனிமேல் நீளம் குறைய வேண்டியதுதான். தூமகேதுவினால் விபத்து ஏதேனும் ஏற்படுவதாயிருந்தால், அதி சீக்கிரத்தில் அது ஏற்பட்டாக வேண்டும். கடவுளே! இராஜ குலத்தில் யாருக்கு என்ன நேரிடுமோ என்னமோ!'' என்றார் சோதிடர்.

வந்தியத்தேவனுடைய உள்ளம் அதிவேகமாக அங்குமிங்கும் பாய்ந்தது. தஞ்சையில் பாரிச வாயு பீடித்துப் படுக்கையாயிருக்கும் சுந்தர சோழரும், நாகைப்பட்டினத்தில் நடுக்கு சுரம் வந்து கிடக்கும் பொன்னியின் செல்வரும், கடம்பூர் மாளிகையில் நந்தினியைச் சந்திக்கப் போகும் ஆதித்த கரிகாலரும், இராஜ்யத்துக்கு ஆசைப்பட்டு மக்களின் கோபத்துக்குப் பாத்திரமாகியிருக்கும் மதுராந்தகரும், கையில் கொலை வாளை வைத்துக் கொண்டு கொஞ்சும் நந்தினியும் அவனுடைய உள்ளத்தில் வரிசையாகப் பவனி வந்தார்கள்.

''அதெல்லாம் போகட்டும், சோதிடரே! இராஜ குலத்தாரின் விஷயம் நமக்கு என்னத்திற்கு? நான் இப்போது மேற்கொண்டு போகும் காரியம் எப்படி முடியும், சொல்லுங்கள்!''

''முன்னே உனக்குச் சொன்னதைத்தான் இப்போதும் சொல்ல வேண்டியிருக்கிறது, அப்பனே! எத்தனையோ விபத்துக்கள் உனக்கு வரும்; அவற்றையெல்லாம் வெற்றி கொள்வதற்கு எதிர்பாராத உதவிகளும் உனக்குக் கிடைக்கும்!'' என்றார் சோதிடர்.

இப்போது வாசலில் வந்து கொண்டிருப்பது விபத்தா, உதவியா என்று வந்தியத்தேவன் எண்ணமிட்டான். ஏனெனில், அச் சமயம் வாசலில் ஆடவர்களின் குரல்களுடன் பெண்களின் குரல்களும் கேட்டன. இருவரும் வாசற் புறத்தை நோக்கினார்கள்.

மறு நிமிடம் வானதி தேவியும் அவளுடைய பாங்கியும் உள்ளே வந்தார்கள்.

வந்தியத்தேவன் எழுந்து நின்று மரியாதையுடன் ''தேவி! மன்னிக்க வேண்டும்! தாங்கள் இங்கே வரப் போகிறீர்கள் என்று தெரிந்திருந்தால், நான் வந்திருக்க மாட்டேன்!.....'' என்றான்.

## அத்தியாயம் 33

## வானதி கேட்ட உதவி

“யா! என்னிடம் ஏன் அவ்வளவு கோபம்? தங்களுக்கு நான் என்ன தீங்கு செய்தேன்?'' என்ற கொடும்பாளூர் இளவரசியின் தீனமான குரல் வந்தியத் தேவனை உருக்கி விட்டது. இந்தப் பெண்ணிடம் தான் உண்மையில் எதற்காகக் கோபங் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. பூங்குழலி ஒரு கணம் அவன் மனக்கண்முன் வந்து மறைந்தாள். அவளுக்காக இந்தப் பெண்ணிடம் கோபங்கொள்ளுவது என்ன நியாயம்?

''அம்மணி! மன்னிக்க வேண்டும். அந்த மாதிரி ஒன்றும் நான் சொல்ல

வில்லை. தாங்கள் சோதிடரைப் பார்த்து விட்டுப் போகும் வரையில் நான் வெளியில் காத்திருந்திருப்பேன் என்றுதான் சொன்னேன். எனக்கு ஒன்றும் அவசரமில்லை. இப்போது கூட.......

''தாங்கள் வெளியேற வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. தங்களுக்கு அவசரமில்லை என்று அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். உண்மையில் நான் இங்கே சோதிடரைப் பார்க்க வரவில்லை. இவருடைய சோதிடத்தில் எனக்குக் கொஞ்சங்கூட நம்பிக்கை இல்லாமற் போய் விட்டது!.....''

''தேவி! தங்கள் சித்தம் என் பாக்கியம்! ஒருகாலத்தில் என் சோதிடம் பொய்யாகவில்லை என்பதைத் தாங்களே உணர்வீர்கள். உணர்ந்து, இந்த ஏழையைப் பாராட்டுவீர்கள்!'' என்றார் சோதிடர்.

''அப்போது பார்த்துக் கொள்ளலாம்!'' என்று வானதி கூறிவிட்டு வந்தியத்தேவனைப் பார்த்து, ''ஐயா! நான் தங்களைப் பார்க்கத்தான் இங்கே வந்தேன். வழியில் தாங்கள் குதிரை மீது சென்றதைப் பார்த்தேன். நின்று விசாரிப்பீர்கள் என்று நினைத்தேன். பராமுகமாகப் போய் விட்டீர்கள்! அதைப் பற்றி நான் அதிகமாக ஆச்சரியப்படவில்லை. இந்த அநாதைப் பெண்ணிடம் அவ்வளவு அக்கறை எதற்காக இருக்க வேண்டும்?'' என்றாள்.



வந்தியத்தேவனுடைய கண்ணில் கண்ணீர் வந்து விடும் போலிருந்தது.

''தேவி! இது என்ன வார்த்தை? கொடும்பாளூர் பராந்தக சிறிய வேளாரின் செல்வப் புதல்வி, தென் திசைச் சேநாதிபதி பூதிவிக்கிரம கேசரியின் வளர்ப்புக் குமாரி, பழையாறை இளையபிராட்டியின் அந்தரங்கத்துக்கு உகந்த தோழி, இத்தகைய தங்களை அநாதைப் பெண் என்று யார் ஒப்புக் கொள்வார்கள்? — பாதையில் நின்று விசாரிப்பது மரியாதைக் குறைவாயிருக்குமென்று வந்து விட்டேன். வேறொன்றுமில்லை. என்னால் ஏதாவது ஆக வேண்டிய காரியம் இருந்தால்....

''ஆம், ஐயா! தங்களால் ஆக வேண்டிய காரியம் அவசியம் இருக்கிறது. தங்களிடம் ஒரு முக்கியமான உதவி கோருவதற்காகத் தான் இந்த வீட்டுக்குள் நான் வந்தேன்....''

''சொல்லுங்கள்; என்னால் முடியக்கூடிய காரியமாயிருந்தால்.....''

''தங்களால் முடியாத காரியம் கூட ஒன்று இருக்க முடியுமா, என்ன? இலங்கைப் பிரயாணத்தின் போது தங்களுக்கு நேர்ந்தவற்றையெல்லாம் ஓரளவு நானும் கேட்டறிந்திருக்கிறேன். நான் கோரும் உதவியை அளிப்பதாக முதலில் வாக்குத் தர முடியுமா?''

வந்தியத்தேவன் தயக்கத்துடன் ''தேவி! உதவி எத்தகையது என்று சொன்னால் நல்லது!'' என்றான்.

''ஆம்; தங்களை ஏமாற்றி நான் வாக்குறுதி பெறக் கூடாதுதான். ஆகையால் காரியத்தைச் சொல்லி விடுகிறேன். சோதிடருக்கும் தெரியலாம்; அதனால் பாதகம் இல்லை. நான் புத்த தர்மத்தை மேற்கொண்டு பிக்ஷுணி ஆகி விடுவது என்று தீர்மானித்திருக்கிறேன்.....''

''என்ன? என்ன?''

''இது என்ன வார்த்தை?''

''கூடவே கூடாது!''

''உலகம் பொறுக்காது!''

''நடவாத காரியம்!''

இவ்வாறெல்லாம் சோதிடரும்

வந்தியத்தேவனும் மாற்றி மாற்றிச் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, வானதி, ''ஆம்; புத்த சந்நியாசினி ஆவதென்று முடிவு செய்து விட்டேன். அதில் ஏன் உங்களுக்கு அவ்வளவு ஆட்சேபம்? தவறு என்ன? பழந் தமிழ் நாட்டில் எத்தனையோ பெண்கள் துறவறம் மேற்கொண்டதில்லையா? மாதவியின் புதல்வி மணிமேகலை துறவறம் நடத்தித் தெய்வத்தன்மை பெறவில்லையா? 'மணிமேகலா தெய்வம்' என்று அவளை நாம் இன்று போற்றவில்லையா? அவ்வளவு பெரிய ஆசையெல்லாம் எனக்குக் கிடையாது. இந்தப் பயனற்ற வாழ்க்கையை முடித்துக் கொள்ள முயன்றேன். அதில் தவறி விட்டேன். கடவுளுடைய விருப்பம் நான் உயிரோடு இன்னும் சில காலம் இருக்க வேண்டும் என்பது போலும். அப்படி இருக்கக் கூடிய காலத்தைப் புத்த மடம் ஒன்றில் சேர்ந்து ஜீவகாருண்யத் தொண்டு புரிந்து கழிக்க விரும்புகிறேன். இதற்குத் தாங்கள் எனக்கு உதவி செய்யத் தயங்க மாட்டீர்கள் அல்லவா?'' என்றாள்.

வந்தியத்தேவன் மனத்தில் ஒரு சிறிய சந்தேகம் உதித்தது. அது அவனைத் திடுக்கிடச் செய்தது.

''தேவி! தங்கள் தீர்மானம் நியாயமன்று. எனினும் அதைச் சொல்லும் உரிமை எனக்குக் கிடையாது. தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்கள் தங்களுக்கு அதைப் பற்றி யோசனை சொல்ல வேண்டும். தங்கள் பெரிய தந்தை சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி கூடிய சீக்கிரம் திரும்பி வரப் போகிறார் என்று தெரிகிறது.....''

''ஐயா! நான் யாருக்காகவும் காத்திருக்கப் போவதில்லை; யாருடைய யோசனையையும் கேட்கப் போவதுமில்லை. தீர்மானமாக முடிவு செய்து விட்டேன். தங்களுடைய உதவியைக் கோருகிறேன்.....''

''இது விஷயத்தில் நான் என்ன உதவி செய்யக்கூடும், தேவி!''

''சொல்லுகிறேன். நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் போவதற்காக நான் புறப்பட்டேன். அங்கே சென்று புத்த குருமார்களை



அடுத்துத் தீட்சை பெற்றுக் கொள்ள எண்ணிக் கிளம்பினேன். வழித் துணைக்குத் தாங்கள் என்னுடன் நாகைப்பட்டினம் வரையில் வர வேண்டும். அதுவே நான் கோரும் உதவி!''

வந்தியத்தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. கொடும்பாளூர் இளவரசி இலேசுப்பட்டவள் அல்ல. நாமும் இளையபிராட்டியும் பேசிக் கொண்டது அரை குறையாக இவள் காதில் விழுந்திருக்க வேண்டும். தன்னிடம் முழு விவரங்களையும் தெரிந்து கொள்ளப் பார்க்கிறாள். நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் போகப் புறப்பட்டது இளவரசரை அங்கே சந்திக்கும் நோக்கத்துடனேதான்! அதற்கு ஒரு நாளும்

தான் உடந்தையாயிருக்க முடியாது.

''அம்மணி! ரொம்பவும் மன்னிக்க வேண்டும். தாங்கள் கோரும் உதவி என்னுடைய சக்திக்கு அப்பாற் பட்டது.''

''இது என்ன விந்தை? ஈழ நாட்டுக்குச் சென்று எத்தனை எத்தனையோ அற்புதங்களைச் சாதித்து வந்தவருக்கு இந்த அநாதைப் பெண்ணை நாகைப்பட்டினத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பது முடியாத காரியமாகுமா?''

''தேவி! முடியாத காரியம் ஒன்றுமில்லை. ஆனால் நான் இச்சமயம் மேற்கொள்ள இயலாது. முதன் மந்திரியும் இளையபிராட்டியும் என்னை அவசரமாகக் காஞ்சிக்குப் போகும்படி கட்டளையிட்டிருக்கிறார்கள். அவர்கள் கொடுத்த ஓலையுடன் போகிறேன். மிக முக்கியமான இராஜாங்கக் காரியமாகப் போகிறேன். ஆகையினால்தான் முடியாது என்று சொன்னேன். வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால்.....''

''ஆம், ஆம்! விருப்பமில்லாவிட்டால் எத்தனையோ காரணங்கள் சொல்லலாம். அதனால் பாதகம் இல்லை. தனியாகப் பிரயாணம் செய்வது என்ற எண்ணத்துடனே தான் கிளம்பினேன். வழியில் சிற்சில இடங்களில் காளாமுகர்களின் கூட்டங்களைப் பார்த்ததும் கொஞ்சம் பயம் உண்டாயிற்று. சகல ஜீவர்களையும் காப்பாற்றக் கடமைப்பட்ட கடவுள் இருக்கிறார். அவரிடம் பாரத்தைப் போட்டு விட்டுப் புறப்படுகிறேன். உலகத்தைத் துறந்து சந்நியாசினியாக முடிவு செய்த ஒரு பேதைப் பெண்ணை யார் என்ன செய்து விடுவார்கள்? போய் வருகிறேன், சோதிடரே!'' என்று கூறிவிட்டு வானதி புறப்பட்டாள். அவளைப் பின் தொடர்ந்து போய்க் கொண்டே சோதிடர், ''தேவி! தேவி! இருட்டும் சமயமாகி விட்டதே! அமாவாசைக் கங்குல். அதோடு வடகிழக்கில் மேகங்கள் குமுறுகின்றன. இரவு இந்த ஏழையின் குடிசையில் தங்கி விட்டுக் காலையில் போகலாமே!'' என்றார்.

''இல்லை, சோதிடரே! மன்னிக்க வேண்டும். இரவு திருவாரூர் போய்த் தங்குவதாக எண்ணம். இந்த மனிதர் தான் துணைக்கு வர மறுத்து விட்டார். திருவாரூரில் யாராவது கிடைக்காமலா போகிறார்கள்? அப்படி நான் என் உயிரைப் பற்றிக் கவலைப்படவும் இல்லை. இதனால் யாருக்கு என்ன உபயோகம்?.....''

சோதிடர் காதிலும் வந்தியத்தேவன் காதிலும் கடைசியாகக் காதிலே விழுந்த வார்த்தைகள் இவைதான். வாசலில் காத்திருந்த பல்லக்கில் வானதி ஏறிக் கொண்டாள். பல்லக்கு மேலே சென்றது.



ல்லக்கு கண்ணுக்கு மறையும் வரையில் வந்தியத்தேவனும் சோதிடரும் அதைப் பார்த்த வண்ணம் நின்றார்கள்.

பிறகு வந்தியத்தேவன், ''கொடும்பாளூர் இளவரசி சில காலத்துக்கு முன்பு வரையில் பெரும் பயங்கொள்ளியாயிருந்தாள். இளையபிராட்டியின் மற்றத் தோழிகள் இவளை அதற்காகப் பரிகசித்துக் கொண்டிருந்தார்கள். பொம்மை முதலையை நதியில் மிதக்க விட்டு இவளைப் பயமுறுத்திப் பார்த்தார்கள்; நான் கூட அதில் ஏமாந்து போனேன். இப்போது திடீரென்று இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு தைரியம் எப்படி வந்தது? இவள் தனியே பிரயாணம் செய்யக் கிளம்பியது என்ன விந்தை? இளையபிராட்டி இதற்குச் சம்மதித்ததுதான் எப்படி?'' என்றான்.

''எனக்கும் அது ஆச்சரியத்தையே அளிக்கிறது. சென்ற முறை இப்பெண் இந்தக் குடிசைக்கு வந்திருந்த போது, திடீரென்று மயக்கம் போட்டு விழுந்து விட்டாள்; தயங்கித் தயங்கி ஈனஸ்வரத்தில் பேசினாள். அந்தக் கொடும்பாளூர் இளவரசிதானா இவள் என்றே சந்தேகமாயிருக்கிறது. இன்று எவ்வளவு படபடப்பாகவும் துணிச்சலாகவும் பேசினாள்?''

''இப்படிப்பட்ட திடீர் மன மாறுதலுக்கு என்ன காரணமாயிருக்கும் என்று நினைக்கிறீர்கள்?'' என்று

கேட்டான்.

"ஏதோ முக்கியமான செய்தி இவளுடைய மனத்தில் ஒரு பெரும் அதிர்ச்சியை உண்டு பண்ணியிருக்க வேண்டும்."

"அப்படி என்ன முக்கியமான செய்தி இருக்க முடியும்?"

"ஏன்? பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டு விட்ட செய்தியே போதாதா? இந்தப் பெண்ணுக்கும் இளவரசருக்கும் திருமணம் நடக்கக் கூடும் என்று பேச்சாயிருந்ததே!"

இவ்விதம் சோதிடர் கூறிய போது, வந்தியத்தேவன், 'பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டு விட்ட செய்தியா, அல்லது அவர் பிழைத்து நாகைப்பட்டினத்தில் இருக்கிறார் என்ற செய்தியா, அல்லது பூங்குழலியைப் பற்றி நான் கூறிய செய்தியா, எது இவளுக்கு இத்தகைய அதிர்ச்சியை அளித்திருக்கக் கூடும்?' என்று சிந்தனை செய்தான்.

"ஆம்; சோதிடரே! கொடும்பாளூர் வம்சத்தார் பரம்பரையான வீர சைவர்களாயிற்றே! இந்தப் பெண்ணுக்குத் திடீர் என்று புத்த மதத்தில் பற்று உண்டாவானேன்?" என்றான்.

"பூர்வஜன்ம வாசனையாயிருக்கலாம்" என்றார் சோதிடர்.

"நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் புறப்படுவானேன்?"

"அதுதான் எனக்கும் வியப்பை அளிக்கிறது!"

"உம்முடைய சோதிட சாஸ்திரத்தில் பார்த்துச் சொல்ல முடியாதா?"

"தம்பி! சோதிட சாஸ்திரத்தின் மூலம் இதை எப்படி அறியலாம்? இது ஒற்றாடல் சாஸ்திரத்தைச் சேர்ந்தது."

"ஒற்றாடல் என்று ஒரு சாஸ்திரமா?"

"ஏன் இல்லை? பொய்யாமொழிப் புலவரின் திருக்குறளைப் பற்றி நீ கேட்டதில்லையா?"

"அப்படி ஒரு நூல் உண்டு என்று கேட்ட ஞாபகமாயிருக்கிறது."

"அந்த நூலில் 'ஒற்றாடல்' என்று ஓர் அதிகாரம் இருக்கிறது. அதில் பத்துப் பாடல்கள் இருக்கின்றன."

"அப்படியா? அவற்றில் இரண்டொரு நல்ல பாடல்கள் சொல்லுங்கள்!"

"எல்லாம் நல்ல பாடல்கள்தான் இதைக் கேள்:

**'வினைசெய்வார் தஞ்சுற்றம்**
**வேண்டாதார் என்றாங்கு**
**அனைவரையும் ஆராய்வது ஒற்று.**

அரசன் தன் கீழ் ஊழியம் செய்வோரையும் தன்னுடைய சொந்த உறவினரையும் அவ்வாறே தன் பகைவர்களையும் ஒற்றர்கள் வைத்து ஆராய்ந்து கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர். இன்னும் கேள்:

**'துறந்தார் படிவத்தாராகி இறந்தாராய்ந்து**
**என்செயினும் சோர்வில் தொற்று'**

துறவிகளைப் போல் வேடம் பூண்டும், செத்தவர்களைப் போலப் பாசாங்கு செய்தும், எதிரிகள் எவ்வளவு துன்புறுத்தினாலும் இரகசியத்தை வெளியிடாமலும் சோர்வில்லாமல் உழைப்பவன் ஒற்றன் என்று வள்ளுவர் கூறுகிறார். அரசர்கள் ஒரு ஒற்றனுடைய காரியத்தை இன்னொரு ஒற்றனைக் கொண்டு ஒற்றறிய வேண்டும் என்றும் அவர் சொல்லியிருக்கிறார்.

**'ஒற்றொற்றித் தந்த பொருளையும்**
**மற்றுமோர்**
**ஒற்றினால் ஒற்றிக் கொளல்.'**

இந்தப் பாடல்களையெல்லாம் நீ கேட்டதில்லையென்றா சொல்கிறாய்?"

வந்தியத்தேவனுக்கு ஒரே வியப்பாய்ப் போய் விட்டது. இனி அவகாசம் கிடைத்ததும் திருக்குறளைப் படித்து விட்டுத்தான் வேறு காரியம் பார்ப்பது என்று தீர்மானித்துக் கொண்டான். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இப்படியெல்லாம் இராஜரீக முறைகளைப் பற்றி எழுதியவர் எத்தகைய அறிவாளியாயிருக்க வேண்டும்?

இன்னும் சற்றுப் பேசிக் கொண்டிருந்து விட்டு வந்தியத்தேவன் புறப்

பட்டான். "இன்றிரவு இங்கே தாமதித்து விட்டுக் காலையில் போகலாமே?" என்று சோதிடர் கூறியதை அவன் கேட்கவில்லை.

"இன்னொரு சமயம் வருகிறேன்; அப்போது தங்கள் விருந்தாளியாயிருக்கிறேன்" என்றான்.

"இன்னொரு சமயம் நீ இங்கு வரும்போது என்னுடைய சோதிடங்கள் பலித்திருப்பதைக் காண்பாய்!" என்றார் சோதிடர்.

"ஐயா, சோதிடரே! நீர் சோதிடம் ஒன்றுமே சொல்லவில்லையே? சொல்லியிருந்தால் அல்லவா அவை பலிக்க முடியும்?" என்று கூறி நகைத்துக் கொண்டே வந்தியத்தேவன் குதிரை மீது ஏறிப் புறப்பட்டான்.

சோதிடர் வீட்டிலிருந்து சற்றுத் தூரம் வரையில் ஒரே பாதைதான் இருந்தது. பல்லக்குச் சென்ற பாதையிலேயே அவனும் போக வேண்டியிருந்தது. பின்னர், பாதைகள் இரண்டாகப் பிரிந்தன. ஒரு பாதை, வடக்கு நோக்கிக் கொள்ளிடக் கரைக்குச் சென்றது. இன்னொன்று, தென்கிழக்காகத் திருவாரூர் நோக்கிச் சென்றது. திருவாரூர்ச் சாலையில் வெகு தூரத்தில் பல்லக்குப் போய்க் கொண்டிருப்பதை வந்தியத்தேவன் பார்த்தான். ஒரு கணம் அவனுடைய உள்ளம் தத்தளித்தது. கொடும்பாளூர் இளவரசி கேட்ட உதவியை மறுக்க வேண்டி வந்து விட்டதே! உண்மையிலேயே அவளுக்கு உதவி தேவையாயிருக்குமானால்.... வழியில் அபாயம் ஏதேனும் ஏற்படுமானால்.... பின்னால் அந்தச் செய்தி தெரியும் போது என்னை நானே மன்னித்துக் கொள்ள முடியுமா? வழித் துணை போக மறுத்தது பற்றி நெடுங்காலம்வருந்தவேண்டியிராதா? ஆயினும் என்ன செய்வது? முதன் மந்திரியும் இளையபிராட்டியும் இட்ட கட்டளை மிகக் கண்டிப்பானது. வேறு காரியங்களில் நான் இப்போது தலையிட முடியாது. முன்னர் சில முறை அப்படிச் சம்பந்தமில்லாத காரியங்களில் தலையிட்டுத் தொல்லைப்பட்டதெல்லாம் போதும். ஆழ்வார்க்கடியான் வேறு எச்சரித்திருக்கிறான். அன்றியும், வானதி தேவியைத்தான் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்கு அழைத்துச் செல்வதென்பது கனவிலும் நினைக்க முடியாத காரியம்......

இவ்வாறு முடிவு செய்து வந்தியத்தேவன் குதிரையைக் கொள்ளிடக் கரைப் பாதையில் திருப்பினான். அதே சமயத்தில் 'வீல்' என்ற ஒரு அபயக் குரல், — மிக மிக இலேசான பெண் குரல், — ஒலித்ததாகத் தோன்றியது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். பல்லக்கைக் காணவில்லை. அங்கேயிருந்த சாலை முடுக்கில் திரும்பியிருக்கக்கூடும். ஆயினும் போய்ப் பார்த்து விட வேண்டும் என்ற முடிவுக்கு ஒரு கணத்தில் வந்து விட்டான் வந்தியத்தேவன். அதனால் அப்படியொன்றும் தாமதம் ஏற்பட்டு விடப் போவதில்லை. குதிரை பாய்ந்து சென்றது. வெகு சீக்கிரத்தில் சாலை முடுக்கின் அருகில் வந்து விட்டது. அங்கே அவன் கண்ட காட்சி வந்தியத்தேவனுடைய இதயமே நின்று விடும்படி செய்தது. பெண் ஒருத்தி சாலை ஓரத்து மரம் ஒன்றில் கட்டப்பட்டிருந்தாள். அவளுடைய வாயில் துணி அடைக்கப்பட்டிருந்தது. இருட்டும் நேரமாதலால் யார் என்று முதலில் தெரியவில்லை. அருகில் சென்று பார்த்தான். வானதியின் பல்லக்குடன் நடந்து சென்ற சேடிப் பெண் என்று தெரிந்தது. அவள் முனகிக் கொண்டே தன் கட்டுக்களை அவிழ்த்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தாள். வந்தியத்தேவன் குதிரையிலிருந்து பாய்ந்து இறங்கி, முதலில் வாயில் அடைத்திருந்த துணியை எடுத்து விட்டு, கட்டுக்களையும் அவிழ்த்து விட்டான். அவ்வளவு பலமாகக் கட்டப்படவில்லை என்பது அவன் உள்மனத்தில் பதிந்தது.

"பெண்ணே! என்ன நடந்தது? சீக்கிரம் சொல்! பல்லக்கு எங்கே? உன் எஜமானி எங்கே?" என்று பதறிக் கொண்டே கேட்டான்.



## அருள்வாக்கு

ஓர் ஆசையை இன்னோர் ஆசை முழுங்கி, ஆனந்தத்தைப் பறிப்பதைப் பார்க்கிறோம். ரொம்பவும் பிடித்த பாடகரின் கச்சேரி. ஃப்ரீபாஸும் கிடைக்கிறது. ஆனால் யாரோ நெருங்கின பந்துவுக்கு அன்று ஆபரேஷன், அல்லது ''என்னவோ''வே நேர்ந்து விட்டது. என்றால் கச்சேரிக்குப் போகத் தோன்றுகிறதா? இப்போது பாட்டு ஆசையும் ஆனந்தமும் என்ன ஆயின? ஓர் ஆசையை இன்னோர் ஆசை முழுங்கி விடுகிறது. பாட்டு ஆசையை விட பந்துத்வ ஆசை பெரிசாயிருக்கிறது.

சாக்லேட்டை நீட்டினால் கையிலிருக்கிற சொப்பை ஒரு குழந்தை போட்டு விட்டு இதற்கு ஓடி வருகிற மாதிரிதான் பெரியவர்கள் என்று சொல்லிக் கொள்கிற நாமும் இருக்கிறோம்!

ஏதோ கொஞ்சம் ஸ்வாமி ஆசையும் நடுவில் வந்து கோவிலுக்குப் போகிறான். புறப்பாட்டுக்கு நாழியாகும் என்பதால் காத்துக் கொண்டிருக்கிறான். அன்றோடு ஸினிமா கடைசி ஷோ என்று காதில் விழுகிறது. உடனே ''புறப்பாட்டை'' விட்டுவிட்டு இவனே ஸினிமா கொட்டாய்க்குப் புறப்படுகிறான். அல்லது மாற்றியும் சொல்லலாம். ஸினிமாவுக்குக் கிளம்புகிறான். அன்றைக்கு ஸ்வாமி புறப்பாடு என்று கேள்விப்படுகிறான். உடனே ஸினிமா கிடக்கட்டும் என்று கோவிலுக்கு நடையை மாற்றிக் கொள்கிறான். எதுவோ ஒன்று. மொத்தத்தில் ஓர் ஆசையும் நிரந்தரமாக இல்லை. இன்னோர் ஆசை தன்னை முழுங்க விட்டு விடுகிறது. ஒரேயடியாயும் ஜீர்ணமாகி விடுவதில்லை. மறுபடி பழைய பலத்தோடேயே திரும்பி வந்து நம்மைப் பிடித்துக் கொள்கிறது.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

சேடிப் பெண் உளறிக் குளறி மறுமொழி கூறினாள். அந்தச் சாலை முடுக்கில் பல்லக்குத் திரும்பிய போது திடீரென்று ஏழெட்டு மனிதர்கள் பக்கத்து மரங்களின் மறைவிலிருந்து பாய்ந்து வந்தார்கள். அவர்கள் சிலருடைய கைகளில் மண்டை ஓடுகளும் ஆலாயுதங்களும் காணப்பட்டன. அவர்களில் இரண்டு பேர் சேடிப் பெண்ணை மண்டையில் அடித்துக் கீழே தள்ளினார்கள். வாயில் துணியை அடைத்தார்கள். பிறகு இழுத்துக் கொண்டு போய் மரத்தில் கட்டினார்கள். இதற்குள் மற்றவர்கள் பல்லக்குச் சுமந்தவர்களிடம் ஏதோ பயங்கரமான குரலில் சொல்லவே, அவர்கள் பாதையை விட்டு விலகிக் குறுக்கு வழியில் பல்லக்குடன் ஓடினார்கள். மற்றவர்களும் தொடர்ந்து போனார்கள். 'வீல்' என்று சத்தம் போட்டது சேடிப் பெண்தான். வானதி தேவியின் குரலே கேட்கவில்லை. — இவ்விதம் கூறிவிட்டு, பல்லக்குச் சென்ற குறுக்குப் பாதையையும் அச் சேடிப் பெண் சுட்டிக் காட்டினாள்.

''பெண்ணே! நீ அந்தக் குடந்தை சோதிடர் வீட்டிற்குப் போயிரு! நான் உன் எஜமானியைக் கண்டுபிடிக்கப் பார்க்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் குதிரை மீது பாய்ந்து ஏறினான். குதிரை இராஜபாட்டையிலிருந்து திரும்பிக் குறுக்கு வழியில் சென்றது. மேடு, பள்ளம், காடு, செடி என்று பாராமல் அதிவேகமாய்ச் சென்றது.

(தொடரும்)

# தன்மான உணர்வு

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — மூன்றாம் பரிசு பெறும் கதை-II



வடிவு ஆறு மணிக்கு முன்பே வந்து சேர்ந்து விடவேண்டும் என்று எண்ணிக் கொண்டுதான் புறப்பட்டாள். ஆனால், சந்தையை வந்தடைய எட்டு மணிக்குமேல் ஆகிவிட்டது.

நேரமாகிவிட்ட பரபரப்புடன், கூட்டத்தில் இடித்துக் கொண்டு செல்கின்ற ஆட்களைப் பொருட்படுத்தாமல் சந்தைக்குள் புகுந்தவளை,

"இன்னாம்மா... நில்லு?" என்று ஒரு குரல் விளித்தது.

வடிவு காதில் வாங்கிக் கொள்ளாமல் வேகமாக நடந்தாள்.

"ஏய், கோழி கொண்டு போறவளே, உன்னைத்தான்...!" என்று குரல் மீண்டும் விளிக்கவே, வடிவு நின்று திரும்பிப் பார்த்தாள்.

கேட்டின் முன் பெஞ்சு போட்டு உட்கார்ந்திருந்த முறுக்கு மீசைக்காரர், "நாலணா குடுத்துட்டுப் போ," என்று தோரணையாக, ஏதோ ஒரு பெரிய குற்றத்தைக் கண்டுபிடித்துவிட்ட பாவனையுடன் கேட்டார்.

வடிவு புரியாமல் நின்று, அந்த ஆளை ஏற இறங்கப் பார்த்தாள்.

"என்னா...? கோழியைச் சந்தைக்குள்ளால கொண்டு போகணும்னா நாலணா கொடுத்துட்டுப் போ."

'சந்தைக்குள்ளால கோழியைக் கொண்டு போகணும்னா நாலணா தீர்வை கொடுக்கணும்' என்று சாமிக்கண்ணு சொன்னது இப்போதுதான் ஞாபகம் வந்தது அவளுக்கு.

கோழியை விற்க வேண்டும் என்று தீர்மானித்ததும் சாமிக்கண்ணுவிடம்,

"அண்ணே! தீபாவளிக்கு ஒரு வழியும் இல்லே. ஒரு கோழி நிக்குது. அதை விக்கலாம்னு இருக்கேன். வித்துக் கொடுப்பீரா?" என்று கேட்டாள்.

"இங்கே யாரு வெலை தருவா? சந்தைக்குக் கொண்டு போனா நல்ல விலைக்குப் போகும். சும்மா நீயே கொண்டு போய் வித்துட்டு வா" என்று சந்தை விதிமுறைகளையும் வழிமுறைகளையும் சொல்லிக் கொடுத்தார் அவர்.

எப்படியும் கோழியை விற்றால்தான் ஆச்சு என்கிற நிலைமை அவளுக்கு. ஏதோ ஓர் அசட்டுத் தைரியத்தில் முன்பின் தெரியாத இந்த இடத்துக்குக் கிளம்பி வந்துவிட்டாள்.

முந்தானையில் முடிச்சிட்டுப் பத்திரப்படுத்தி வைத்திருந்த இருபத்தைந்து காசு நாணயத்தை எடுத்து முறுக்கு மீசைக்காரரிடம் தந்துவிட்டுச் சந்தைக்குள் புகுந்தாள் அவள்.

மாட்டுச் சந்தையின் வால் பகுதியில் இருந்த கோழிச்சந்தை ஆள் அதிகமில்லாமல் வெறிச்சோடிப் போய்க் கிடந்தது.

வெள்ளை வேஷ்டியும் சில்க் சட்டையுமாக ஓர் ஆள் நிற்க, அவருக்கு முன்னால் சேவலும் பெட்டையுமாகக் குவிந்து கிடந்



தன.

ஒரு முதியவர் மேல் சட்டை இல்லாமல் வெயிலுக்காகத் தலைப்பாகை கட்டிக் கொண்டு ஒரு கோழியின் முன் காவலிருந்தார்.

கொஞ்சம் தள்ளி, ஒரு கிழவிக்கும் குச்சியாக ஆறடி உயரமிருந்த ஒருவனுக்கும் பேரம் நடந்து கொண்டிருந்தது.

வடிவு முதியவருக்கு அடுத்தாற்போல் வந்து நின்றுகொண்டு, கோழியைக் கீழே வைத்துவிட்டு அங்கே நடக்கிற பேரத்தை உன்னிப்பாகக் கவனிக்கலானாள்.

"சேவலுக்கு எவ்வளவு வேணும்?" என்று அந்த ஒல்லி மனிதன் கேட்க,

"முப்பத்தஞ்சு ரூபா" என்றாள் கிழவி.

"இருபது ரூபாய்க்குப் போகாது! இதுக்

சுசி கோபாலகிருஷ்ணன்

''நீங்க டைரக்ட் பண்ணின படம் இருபத்தைந்து நாள் ஓடினதாச் சொல் றீங்களே! இது ஒண்ணும் பெரிய சாதனை இல்லையே.''

''அதெப்படி சொல்லுறே! என் னோட மீதிப் படமெல்லாம் ஒரு வாரம் தானே ஓடியிருக்கு!''

— மணியன் தர்மலிங்கம்.

குப் போய் முப்பத்தஞ்சு சொல்றியே! இருபத்தஞ்சு தர்றேன்.''

''முப்பத்தஞ்சுல ஒரு பைசா குறை யாது.''

இந்தப் பேரம் பேசுகிற விஷயம் வடிவுக் குப் புதியதல்ல.

'இங்கே கிழவி கொஞ்சம் கூட்டிச் சொல் வது போல் விலை சொல்லிவிட்டுப் பிறகு ஒரு ரூபாயோ இரண்டு ரூபாயோ இறக்கி, வியாபாரத்தை முடித்துக் கொள்ள வேண் டும். கிழவி சேவலுக்கு முப்பத்தைந்து சொல் லும்போது கோழிக்கு இருபத்தைந்து தாராள மாகச் சொல்லலாம்' என்று மனத்திற்குள் முடிவு செய்து கொண்டு, அங்கே நடக்கிற விஷயங்களை உன்னிப்பாகக் கவனிக்க லானாள்.

கிழவி இன்னும் முப்பத்தைந்து ரூபாயை விட்டு இறங்கினபாடில்லை.

அவன், ''சரி, இருபத்தேழு தர்றேன்,'' என்று குனிந்து, சேவலின் காலைப் பிடித் துத் தூக்கினான்.

''இல்லை... இல்லை... முப்பத்தஞ்சுக்குக் குறைச்சுத் தரவே மாட்டேன்,'' என்று ஏதோ சேவலே பறிபோய்விட்டது போல் படபடத்தாள் கிழவி.

உண்மையில் சேவல் பறிபோய் விட்டது!

''சரி... சரி...'' என்று சேவலைத் தூக்கிக் குவியலுக்குள் விட்டெறிந்துவிட்டு, ''மொத லாளி! ஒரு இருபத்திரெட்டு கொடுங்க,'' என்று சில்க் சட்டையிடம் கைநீட்டினான்.

அவர் தந்த ரூபாயை வாங்கி, ''இந்தா... பிடி,'' என்று கிழவியிடம் நீட்டினான்.

''முப்பத்தஞ்சுல ஒரு பைசா குறைஞ்சா லும் வாங்க மாட்டேன்'' — கிழவி அடம் பிடித்தாள்.

கிழவியைத் துச்சமாகப் பார்த்துவிட்டு, ''அப்போ, உன் சேவலை எடுத்துக்கப் போ,'' என்று கிழவிக்கு வழிவிட்டு ஒதுங்கிக் கொண்டான் அவன்.

சேவலை எடுப்பதற்காக அடி எடுத்து வைத்த கிழவி, திகைத்துப் போய் நின்று விட்டாள். அவளாலேயே இனம் கண்டு கொள்ள முடியாமல் அவளுடைய சேவல் குவியலுக்குள் சேவலோடு சேவலாகி விட்டி ருந்தது.

''என்னா! ரூபாயைப் பிடிக்கிறியா?''

நீட்டிய கையையும் அவன் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தாள்.

வேறு வழி?

''உன் வாயில் போடத்தான் மூணு மைல் நடந்து வந்தேனாக்கும்? நீ நாசமாப் போக...!'' என்று ஒப்பாரி ராகத்தில் வசை மாரி பொழிந்துவிட்டுப் பணத்தை வாங்கிச் சென்றாள் கிழவி.

எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு நின்றிருந்த வடிவுக்குத் 'திக்'கென்றிருந்தது.

'தட்டுனா மூணா முறிஞ்சு விழுற பொட லங்கா, இந்த வரத்து வர்றானே! இந்தப் பொடலங்காய்க் கிட்ட கொஞ்சம் சாக்கிர தையாத்தான் நடந்துக்கணும்' என்று முன் எச்சரிக்கையாகிக் கொண்டாள் அவள்.

அவன் அடுத்ததாக வடிவிடம் வந்தான்.

'எவ்வளவு வேணும்?' என்று கண் ஜாடை யால் கேட்டான்.

ஆள் பார்க்கச் சுமாராக இருந்துவிட்டால் முதலில் இந்தக் கண் ஜாடைதான் பேசும். பல் இளிக்கிற ஜாதியென்றால் கொஞ்சம் நக்கலும் விரசமும் வார்த்தையில் கலக்கும்.

வடிவு முகத்தை இறுக்கிக்கொண்டு அலட் சியமாக, ''இருபத்தைந்து'' என்றதும் அவன் நேரடியாக வியாபாரத்திற்கு வந்து விட் டான்.

கோழியைக் காலால் ஒரு முறை தட்டிப் பார்த்தான்.

கோழி, 'கோ... கோ...' என்று கொலை விளி விளித்தது. வடிவுக்குத் தன் நெஞ்சில் கால் வைத்து அழுத்தியது போல் இருந்தது.

''பதினெட்டு தர்றேன்.''

''இல்லை.''

''சரி...சரி...ரெண்டு ரூபா மேல போட்டுத் தர்றேன்'' என்று குனிந்தான் அவன்.

வடிவு உஷாராகி விட்டாள்.

''விலையை முடிச்சுட்டுக் கோழியைத் தூக்கும்,'' என்றாள்.

அவளுடைய கண்டிப்பான குரல் அவனி டம் சிறிது தயக்கத்தை ஏற்படுத்தியது. சுதா ரித்துக் கொண்டு நிமிர்ந்து அவளை நேருக்கு நேர் பார்த்தான்.

''நீ கோழியை விக்கத்தான் வந்திருக் கிறியா?''

''நீரு வெலைக்கு வாங்கத்தான் வந்திருக் கிறோ?''

இவ்வளவு அழுத்தமான பதிலை அவன் எதிர்பார்க்கவில்லைதான்.

''உன்கிட்டப் புடிச்சுப் பறிக்க, வரல்ல. விலைக்கு வாங்கத்தான் வந்திருக்கிறேன். இருபத்தி ஒண்ணுக்குக் குடுக்கறியா?'' — குரலில் கொஞ்சம் இயல்பாகி விட்டிருந் தான்.

உடனுக்குடன் நிறத்தை மாற்றிக் கொள் கிற வித்தை வடிவுக்குக் கைவராத கலை. சம்பவத்தின் இறுக்கம் அவளிடம் தணியவே இல்லை. ஒரே பதில்தான்.

''இல்லை!''

''சரி!'' என்று இயல்பாக ஒரு புன்ன கையை முகத்தில் வரவழைத்துக் கொண்டு திரும்பி விட்டான் அவன்.

அந்தப் புன்னகையும் பார்வையும் வடி

வுக்கு மேலும் எரிச்சலை ஏற்படுத்தின.

'போடா... நீ இல்லேன்னா உன் அப்பன் வருவான்' என்று யாருடைய வரவிற்கோ காத்து நிற்கலானாள்.

சுற்று நேரம் கழித்து, பாதி வழுக்கையும் கண்ணில் கண்ணாடியுமாக ஓர் ஆள் வந்தார்.

வடிவுக்கு அவரைப் பார்த்த மாத்திரத்தில் மனசு தானாக ஆசுவாசப்பட்டுக் கொண்டது.

அவர் அவளிடம் வந்து, "கோழிக்கு எவ்வளவு வேணும்மா?" என்று கேட்டார்.

"இருபத்தி மூணு."

— விலையை ஏற்றிச் சொன்னால் ஆள் எங்கே மிரண்டு ஓடிவிடுவாரோ என்று வடிவு கொஞ்சம் இறங்கி வந்திருந்தாள்.

வந்தவர் கோழியை எடுப்பதற்காகக் குனிவதற்குமுன் வடிவே கோழியைத் தூக்கி அவர் கையில் கொடுத்து விட்டாள்.

கையால் எடை பார்த்துத் திருப்திப் பட்டுக் கொண்டு, "கொடுக்கிற விலையைச் சொல்லு," என்றார் அவர்.

"இருபத்தி ஒண்ணுக்குக் கொடுக்காமல் வெச்சிருக்கேன். நீங்க ஒரு ரூபா கூட்டிக் கொடுங்க."

இருபத்தி ஒண்ணுக்குக் கேட்டாலே கொடுத்து விடலாம் என்கிற நிலைமைக்கு வந்துவிட்டிருந்தாள் அவள். ஆனால் நடந்தது வேறு.

"இந்த நோய் பிடிச்ச கோழிக்கா இருபத்தி மூணு?" என்ற குரல் கேட்டு வடிவும் திரும்பிப் பார்த்தாள்.

அந்தப் புடலங்காய்!

அருகில் வந்து நின்று கொண்டு, "சார்! பூவையும், காலையும் பாருங்க! ஒரு மாதிரியா கறுத்துப் போய் இருக்கில்ல?" என்றான் அவரிடம்.

அவர் முகத்தில் சந்தேக ரேகை படர்ந்து விட்டது. கையிலிருந்த கோழியைத் திருப்பித் திருப்பிப் பார்த்தார்.

மனுஷன் தன் பொறியில் விழுந்து விட்டார் என்று ஊர்ஜிதமாகியதும், "சார்! உங்களுக்கு நல்லதாப் பார்த்து நான் தர்றேன்" என்று அவர் கையிலிருந்த கோழியை வாங்கி வடிவின் காலடியில் விட்டெறிந்தான்.

வடிவுக்கு உடல் முழுவதும் பற்றிக்கொண்டு வந்தது. வேறு இடமாக இருந்திருந்தால் நிச்சயமாக அவனை அடித்து வீழ்த்தியிருப்பாள். பழக்கப்படாத இடம். செயலற்றுப் போய் அவனையே முறைத்துப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

"வாங்க சார், உங்களுக்குச் சேவல் வேணுமா? கோழி வேணுமா! எது வேணும்னாலும் எடுத்துக்குங்க சார்," என்று ஏதோ சொல்ல முனைந்த சில்க்குச் சட்டைக்காரரைக் கை சைகையால் அமர்த்திவிட்டுக் கோழிக் குவியலிலிருந்து ஒரு கோழியை எடுத்துக் கொண்டான்.

"பாருங்க சார்! பூவையும் காலையும் பாருங்க. குஞ்சுகோழி. இருபத்தி ஒண்ணு



கொடுங்க, போதும்" என்று அவர் கையில் கோழியைத் தந்துவிட்டான்.

ஏதோ ரொம்ப சகாய விலையில் நல்லதாகப் பார்த்துக் கொடுக்கிறான் என்ற திருப்தியுடன் அவர் வாங்கிக் கொண்டு சென்றார்.

அவர் சென்றதும், இரண்டு கைகளையும் தூக்கி இடுப்பில் ஊன்றிக்கொண்டு வடிவை நேருக்கு நேர் பார்த்துச் சிரித்தான் அவன்.

'இது என் ராஜ்யம். இங்கு நான்தான் சக்கரவர்த்தி. என்னை யாரும் இதுவரைக்கும் ஜெயித்ததில்லை. உன்னால் ஜெயித்து விட முடியுமா?' என்று கேட்பது போல் பட்டது அவளுக்கு.

வடிவும் 'பார்க்கலாம்' என்பது போல் எதிர்ப் பார்வை பார்த்தாள்.

வெகு நேரமாகக் காத்திருந்தாள். யாராவது வரமாட்டார்களா என்று ஏங்கியிருந்தாள். யாருமே வரவில்லை. அவன் தான் வந்தான்.

கைகள் இரண்டையும் பின்னால் கட்டிக் கொண்டு வலதுகாலை ஆட்டிக் கொண்டு ஏளனமாக, "என்னம்மா... கொடுக்கிறியா? இருபத்திரண்டு தர்றேன். பாவம், பொழைச்சிட்டுப் போ..." என்றான்.

வடிவு தலைகவிழ்ந்து கோழியைப் பார்த்தாள். கோழி வாய் பிளந்து நீருக்காகத் தவித்தது. மிடறு விழுங்கி, தொண்டையை ஈரப்படுத்திக் கொண்டாள். தீபாவளி நினைப்புகள் மனத்தில் முட்டின. செலவுகளும் காரியங்களும் கண்முன் கணக்கிட்டன. விரிந்து பரந்த கனவுகள் குறுகிச் சூனியமாயின. எண்ணங்கள் பல சிலவாகி ஒன்றாகி நிலைத்தது. குனிந்து கோழியைத் தூக்கினாள். நமுட்டுப் புன்னகையுடன் முன்னே நின்று கொண்டிருந்தவனை அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துவிட்டு, வேகமாக நடக்கலானாள்.

கேட்டின் முன் காசுகளை எண்ணிச் சரி பார்த்துக் கொண்டிருந்த முறுக்கு மீசைக்காரர் வடிவைப் பார்த்ததும், "என்னம்மா! கோழி விலை போகலியா?" என்று கேட்டார்.

"ஏன், வாங்கின நாலணாவைத் திருப்பித் தரப் போறீரா?"

வெடுக்கென்று கேட்டுவிட்டு, ஆத்திரம் முழுவதையும் கொட்டித் தீர்த்துவிட்ட ஏதோ ஒரு திருப்தியுடன் ரோட்டில் இறங்கி நடக்கலானாள்.

அந்தச் சில்க்சட்டை, அந்தப் புடலங்காய், அந்த முறுக்கு மீசை, மூன்று பேரும் ஏதோ ஓர் அதிசயத்தைப் பார்ப்பது போல் அவளையே பார்த்துக் கொண்டு நின்றார்கள்!

# நீரில் மிதக்கும் நிலா

4

“**வா** சந்துரு.” என்றாள் மதுமதி. “சிவா, உங்ககிட்ட முக்கியமான ஆளை இண்ட்ரட்யூஸ் பண்றதுக்குள்ளே கௌம்பிட்டீங்களே. திஸ் ஈஸ் சந்திரமௌலி. எங்க வீட்டுக்கு ஆல் இன் ஆல். பின்னாடி போர்ஷன். டீ. வி.. வீடு. நாலு அட்டெம்ட்லயும் பாஸ் பண்ணாத பி. எஸ்ஸி!”

சந்திரமௌலி சிரித்தான். கைநீட்டி. சிவராமனின் கைபற்றிக் குலுக்கினான்.

“மது உங்களைப் பத்தி நெறைய சொல்லியிருக்கு சார்” என்றான்.

“அதில் நெஜத்தைவிடப் பொய்தான் அதிகமா இருக்கும். நம்பாதீங்க!” என்றான் சிவராமன். லேசான பெருமூச்சுடன். லேசான விடுதலை உணர்வுடன்.

“கௌம்பிட்டீங்க போல இருக்கு?”

“ஆமா. இன்னொரு நாள் சாவகாசமா வர்றேனே,” என்றான் சிவராமன்.

“லோ மது... நாளைக்கு நாம பார்க்கிறோம். காந்தி சிலைகிட்ட... சாயங்காலம் ஆறு மணிக்கு” என்று சந்திரமௌலியின் காதில் விழாத மாதிரி அடங்கிய குரலில் சொல்லிவிட்டுக் காரை ஸ்டார்ட் செய்தான் சிவராமன்.

**கா**ரில் உட்கார்ந்திருந்த சிவராமன். வேர்க்கடலைவண்டியைத்தாண்டி. ஐஸ்க்ரீம் வண்டியைத் தாண்டி. கரும்புச்சாறு மெஷினைத்தாண்டி. பிளாஸ்டிக் பந்துடன் பிளாட்ஃபாரத்தில் ஓடி வந்த ஒரு மூன்று வயது செல்லக்குட்டியைத்தாண்டிப் பார்வையைப் பதித்திருக்க. அதோ மதுமதி.

சிவராமன் காரை உடன் கிளப்பினான்.

மதுமதியின் பக்கத்தில் போய் நிறுத்தி. கதவைத் திறந்தான். மது மதி முன்சீட்டில் ஏறி. கதவைப் பூ போல் சாத்திக் கொண்டதை ஐந்து [illegible] கண்கள் கவனித்தன.

சிவராமன் ரியர்வியூ மிர்ரரை அட்ஜஸ்ட் செய்துவிட்டுக் காரைக் கிளப்பினான்.

“மொத மொதல்ல நாம சந்திச்ச எடம். ஞாபகமிருக்கா மது?”

“மறக்க முடியுமா சிவா?” என்றாள் மதுமதி. ஓரக் கண்ணால் சிவராமனைக் கனிவுடன். காதலுடன் பார்த்தாள்.

“அந்த எடத்துக்குத்தான் இப்பப் போய்க்கிட்டிருக்கோம்” என்றான் சிவராமன். காற்று கலைத்துவிட்ட தலைமுடியை ஒற்றைக் கையால் சிலுப்பி விட்டுக் கொண்டே.

மதுமதி கண்களை மூடினாள். அவள் வாழ்க்கையின் அந்த அற்புத நாளை மறுபடியும் தொட்டுப் பார்க்க ஓடினாள்

**தி**ருவான்மியூர்!

கொஞ்சம் தாண்டியதும். கோவளத்துப் பாதையில் வரிசையாய் அணிவகுத்த தென்னை மரங்கள். ஆகாயத்திலிருந்து தூவிய மாதிரி அங்கங்கே வீடுகள். இன்னும் பொட்டலாய் இருந்த பிரதேசத்தில் முதல் நாள் மழை உருவாக்கியிருந்த சேறு. சேற்றில் ஸ்திரமாய் நின்று கொண்டிருந்த ஹால் அளவு விளம்பர போர்டுகள். தந்திக் கம்பியில் கறுப்பான சின்னப் பறவை.

மதுமதி சலித்துக் கொண்டாள்.

“இதுக்கு மேல என்னால நடக்க முடியா





''உங்களுக்கு அடுத்த ஜென்மம் என்கிறதுல எல்லாம் நம்பிக்கை இருக்கா...?''

''ஓ... தாராளமா...?''

''அப்போ நூறு ரூபாய் கைமாற்றாகக் கொடுங்களேன்!''

— கடுவை. கோபால்சாமி.

தீ

''ப்ராஜக்ட் ஓகனா சும்மாவா மது? சாதாரண ஸப்ஜக்டா எடுத்திருக்கக் கூடாதா? காதல் திருமணங்களின் வெற்றி தோல்வி பற்றிய மனவியல் ஆய்வு. சொல்றதுக்குள்ளே நாக்கு தடிச்சுப் போகுது. நம்ப ஊர்ல லவ் மேரேஜ் பண்ணவங்க தெருவுக்கு நாலு பேரா இருக்காங்க? தேடித்தான் போகணும்'' என்று சொன்ன லட்சுமி சட்டென்று திரும்பி மதுமதியின் மோவாயை ஏந்திக் கொண்டாள்.

''அங்க பார் மது. அந்தப் பச்சைப் பெயின்ட் வீடு. அதிலதான் மகேஷ் அண்ட் கலாவதியோட சாம்ராஜ்யம் நடக்குது. அவங்களை இண்டர்வியூ பண்ணுவியோ, அவுட்டர்வியூ பண்ணுவியோ... பத்தே நிமிஷம்தான் டயம். அப்புறம் அடிச்சுப் பிடிச்சு வந்தாத்தான் பஸ் பிடிச்சு மவுண்ட் ரோடு தியேட்டருக்குப் படம் ஆரம்பிக்கறதுக்கு முன்னாடியாவது போய்ச் சேரலாம்.''

''இந்த சேத்திலயா? நான் மாட்டேன்!''

''சேறு இல்லேடி. ஒத்தையடிப் பாதை. நேரா வீட்டு வாசலுக்கே கொண்டு போய் விடும் வா.''

''ஏய், லட்சுமி?''

''என்னடி?''

''அந்த ஆளைப் பாரேன். நேர் எதிரே இதே ரூட்ல வர்றானே. தெரிஞ்சு வர்றானா, தெரியாம வர்றானா... ரோக்ஸ்... என்ன ஆனாலும் சரி... நான் எறங்கப் போறதில்லே சேத்துல...''

அவன் அப்போதுதான் நிமிர்ந்து அவர்களைப் பார்த்தான். பார்த்தவுடன் கண்களை விரித்தான். பரபரப்பில் காலைத் தவறாய் வைத்து, சதக்கென்று அமிழ்ந்து குப்புற அடித்து விழுந்தான்.

''ஐயையோ'' என்று மதுமதி மெலிதாய்ப் பதறினாள். லேசாய் ஒரு குற்ற உணர்வு அவளை அரித்தது. ஓடிப் போய் ஒரு கையை நீட்டி அவனை எழுப்பினாள்.

''அடி பட்டுடுச்சா?'' என்று மென்மையாகக் கேட்டாள் மதுமதி.

''அழுக்குப் பட்டிருச்சி! பரவாயில்லை. தாங்க்ஸ்'' என்று சொல்லிவிட்டுத் தண்ணீரில் முங்கி எழுந்த காகம் போல் உடம்பை உதறிக் கொண்டு விடுவிடென்று நடந்தான்.

மதுமதி நடந்து போன அவனையே பரிதாபத்துடன் பார்த்தாள்.

''யாரையோ இண்டர்வியூ பண்ண வந்தே, இப்ப நீயே ஸப்ஜக்ட் ஆய்டுவே போல இருக்கே'' என்றாள் லட்சுமி.

''ச்சீ... பாவம்மா'' என்றாள் மதுமதி.

**கா**ர் சின்னதாய் ஒரு 'ஹாங்க்'கை வெளிப்படுத்திவிட்டுத் திருவான்மியூரைத் தாண்டியது. இரண்டு பக்கங்களிலும் புத்தம் புதிதாய்ச் சின்னச் சின்ன அழகு வீடுகள். முன்பு பார்த்ததைவிட நிறைய மாறியிருந்தது. சிவராமன் விழுந்து எழுந்த காலிமனை மட்டும் காலியாய் இருந்தது. கார் நேரே அதற்குப் பக்கத்தில் போய் நின்றது.

சிவராமன் இறங்கினான். மதுமதியும்...

''இந்த எடத்தை வாங்கிட்டேன் மது.''

''ஏன்னது?''

''ஆமா மது. இங்கேதான் 'மது காட்டேஜ்'னு ஒரு சின்ன வீடு கட்டப் போறேன். நமக்காக.

''சிவா!'' குரல் நெகிழ்ந்து அவன் கையைப் பற்றிக் கொண்டாள் மதுமதி.

''சரியா இன்னும் எட்டே மாசம். நவம்பர் பதினைஞ்சாம் தேதி வீட்டை உனக்குத் தரப் போறேன்.''

நவம்பர் பதினைந்து. மதுமதியின் பிறந்த நாள்.

''எனக்காகவா சிவா இத்தனையும்? எனக்கு இவ்வளவு பெருமை இருக்கா சிவா?''

''அப்புறம் இன்னொரு விஷயம் மது.''

''ம்?''

''சனிக்கிழமை நான் பெங்களூர் போறேன். ஸண்டே அம்மாவுக்கு பர்த்டே. ரெண்டு மூணுநாள் தங்கிட்டு, திரும்பி வர்றப்போ அவங்களையும் கூட்டிக்கிட்டு வருவேன். உங்க வீட்டுக்கு எல்லாருமாச் சேர்ந்து வரப் போறோம். எதுக்கு? முறைப்படியா உன்னைக் கேட்கப் போறோம்.''

**ச**னிக்கிழமை! விமான நிலையம்...

நேஷனல் டெர்மினலின் கண்ணாடிச் சதுரங்கள் நிறைந்த பெரிய ஹால்.

யாரோ ஒருஹிந்தி நடிகைபம்பாயிலிருந்து இறங்கி வந்ததற்காக ஹால் முழுவதும் எழுந்து வரவேற்க, மதுமதிக்குப் பார்வை நிலைக்கவில்லை. கையில் இருந்த கோன் ஐஸ்க்ரீம் உருகி விரலைத் தொட்டது.

''என்ன மது?'' என்றான் சிவா.

''பொழுது போறது கொஞ்சம் கஷ்டமாயிருக்கும் சிவா.

''புதன் கெழமை வந்துடுவேன் மது. சாப்பிடு. தூங்கு. வேறே எதுவும் செய்யாதே. நாலுநாள் ஒரே ஓட்டமா ஓடிடும்... வரட்டுமா?''

''ம்... அம்மா, அப்பா, விஜி எல்லாரையும் கேட்டதாச் சொல்லுங்க.''

மதுமதி கையாட்டி விடை கொடுத்தாள்.

''**ஸ்**டாப்'' என்றான் இளங்குமரன். பிருத்விராஜ் சொல்வதை நிறுத்திவிட்டுச் சுற்றிலும் பார்த்தான்.

# இதர எல்லா ஹேர் டைகளையும் சேர்த்தாலும் அவற்றைவிட ஏராளமானமக்கள் உபயோகிப்பது கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர் டை

அவற்றிற்கான 3 சிறந்த காரணங்கள்




இரண்டு கேசால் சாயல்களில் கிடைக்கிறது: பிளாக் மற்றும் டார்க் ப்ரவுன்

**1** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை கேசத்திற்கு இயல்பான வண்ணத்தையும், தோற்றத்தையும் தருகிறது. இதிலே ஒரு உள்ளிணைந்த கண்டிஷனர் உள்ளது: இது கேசத்தை மென்மையோடும் படிமானத்தோடும் வைத்துக்கொள்ள உதவுகிறது. உண்மையிலேயே, நீங்களே சொன்னால் ஒழிய ஒருவரும் அறிந்துகொள்ள முடியாது.

**2** இதர ஹேர் டைகளைப் போல் அல்லாமல், கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டை உபயோகிக்க எளிதானது, வசதியானது. ஆம், இது உங்கள் கேசத்தை ஷாம்பூ செய்வதுபோல் சுலபமானது.

**3** கோத்ரெஜின் தானே-பரவும் ஹேர்டையின் தரத்தைப் பற்றி நீங்கள் உறுதிப்படுத்திக்கொள்ள முடியும். காரணம், இது உங்கள் கேசத்தை பாதுகாக்கும் வண்ணம் விசேடமாகத் தயாரிக்கப்பட்டது. முழுமையான பாதுகாப்பு— இதுவே, கோத்ரெஜின் உறுதியளிப்பு.

**கோத்ரெஜ்**® வழங்கும் தானே-பரவும் பெர்மனெண்ட் ஹேர் டை.

CLARION/B/GS/50/173 TML



# வெறும் பாசத்தினால் மட்டுமே இவர்களின் மருத்துவக் கட்டணங்களை செலுத்த முடியாது

## மெடிக்ளைம் உதவியால் செலுத்த முடியும்

ஆம், மெடிக்ளைம்—ஒரு ஹாஸ்பிடலைசேஷன் மற்றும் டொமிசிலியரி ஹாஸ்பிடலைசேஷன் பெனி:ஃபிட் பாலிஸி. இது உங்கள் குடும்பத்தினர்க்கு ஒரு வரப்பிரசாதம்.

நீங்கள் எத்தனை அன்பு செலுத்தினாலும் சரி... உங்கள் கம்பெனி எத்தனை மருத்துவத் திட்டம் வழங்கினாலும் சரி... அவை உங்களுக்கு ஏற்படும் பெரிய நோய்கள், அறுவை சிகிச்சைகள், விபத்துகள் போன்றவைகளுக்குத் தேவைப்படும் மருத்துவ பராமரிப்புக்கு ஆகும் கட்டணங்களை செலுத்திவிட முடியாது.

ஆகவே உங்களுக்குத் தேவை மெடிக்ளைம்.

உங்களுடைய தேவைகளுக்கு ஏற்ப - பலரக மருத்துவ வசதிகளை வழங்குகிறது மெடிக்ளைம்.

வீட்டில் இருந்து கொண்டே மருத்துவமனையில் பெறும் சிகிச்சை வசதிகளுக்கும் கூட பாதுகாப்பளிக்கிறது.

இத்திட்டத்தின் கீழ் குடும்பத்தினர் அனைவருக்கும் பாதுகாப்பு செய்து கொண்டால், பிரிமியத்தில் தள்ளுபடியும், வரிவிலக்கும் கிடைக்கும்.

பாசத்தின் பிரதிபலிப்பாக உங்கள் குடும்பத்தினர்களுக்கு, மெடிக்ளைம் திட்டத்தின் கீழ் பாதுகாப்பு செய்து கொள்ளுங்கள்.

இதற்கு ஆகும் செலவோ மிகச் சொற்பம், உங்களுக்கு இதன் மூலம் கிட்டும் பலனோ மிக்க அதிகம்.

இத்திட்டம் உங்கள்பால் மிக்க அக்கறை காட்டுகிறது.

| ஆண்டொன்றுக்கு பிரிமியம் ரூ. | ஹாஸ்பிடலைசேஷன் ரூ. | டொமிசிலியரி ஹாஸ்பிடலைசேஷன் ரூ. |
|---|---|---|
| 200 | 10,500 | 3,100 |
| 250 | 17,600 | — |
| 350 | 25,500 | — |
| 600* | 37,750 | 5,250 |
| 840* | 52,750 | 7,400 |
| 1300* | 82,500 | 11,500 |

வயது வரம்பு: 5-70 ஆண்டுகள்

* கூடுதல் பிரிமியம் செலுத்துவதின் பேரில் பர்சனல் ஆக்ஸிடெண்ட் காப்பு கிடைக்கும்.

**MED+CLAIM**

மெடிக்ளைம் வழங்குவோர் நியூ இந்தியா அஷ்யூரன்ஸ்

**NEW INDIA ASSURANCE**



A subsidiary of the General Insurance Corpn of India

எந்த விபத்திற்கும் நாங்கள் பாதுகாப்பு அளிக்கிறோம்!

CONTOUR ADS-NIA-278E/87

இருவரையும் சுற்றி யூனிட்டே நின்று கொண்டிருந்தது. அவர்கள் அத்தனை பேரும் ஊட்டியின் லவ்டேலுக்கு அருகே ஒரு மலையடிவாரத்தில் கூடியிருந்தார்கள்.

"என்ன ஸ்ரீநாத், கதையைப் பத்தி என்ன நெனைக்கிறே?" என்று கேட்டான் இளங்குமரன்.

கேட்கப்பட்ட ஸ்ரீநாத் ஒற்றைநாடி. குச்சிப் பூச்சி உடலில் கைகள், கால்கள் நீளநீளமாய் அமைந்திருந்தன. அந்த உயரத்திற்கு அவன் அணிந்திருந்த, குறுக்கில் இளமஞ்சள் பட்டை ஓடிய கரும்பச்சை முழுக்கை சட்டை, மிகக் கச்சிதமாய் இருந்தது.

"கதை நல்லாவே போகுது, டைரக்டா... சிவராமன், அப்பா அம்மாவோட பொண்ணு கேக்கத் திரும்பி வர்றானா, இல்லே சும்மா ஒரு 'சொடய்ங்'காக மது மதியை டாவடிக்கிறானா...?"

"கேக்காதே — போகப் போகத் தெரியும். புடிச்சிருக்கா?"

"ம்."

"ஷில்பாதான் மதுமதி... எப்படி குட்டி? நின்னு வௌையாடுமில்ல? ஆங்கிளை ஒழுங்கா வை. நீ பாட்டுக்கு வைட் லென்ஸ் யூஸ் பண்ணி அவ மூஞ்சியைக் கெடுத்துடப் போறே... அப்புறம் கேமிராக்காரனைத் திட்ட மாட்டானுங்க. டைரக்டர் செலக்ஷன் சரியில்லேன்னு என்னைத் தாளிச்சிடுவானுங்க..."

"அதெல்லாம் பார்த்துக்கலாம். முந்தா நாள் வரை கதை ரெடியாகலைன்னே... இப்ப இவ்வளவு நல்ல ஸ்கிரீன் பிளேயை இவரு எடுத்து வுடறாரு... அண்ணன் யாரு?"

"பிருத்விராஜ்னு பேரும்மா. ஒன்லைன் ஒண்ணு புடிச்சிக்கிட்டு வந்தான். கிட்டத்தட்ட நம்ப ஆங்கிள்லேயே திங்க் பண்றான். புடிச்சுக்கிட்டேன். இளங்குமரனை என்னன்னு நெனைச்சே? ரயில்ல வர்றப்ப டிஸ்கஷன். ரூம்ல நைட் ஃபுல்லா டிஸ்கஷன். ஒரு மாதிரி கதையைத் தேத்தியிருக்கேன்... ஓ.கே... நீ லொகேஷன் பாரு... ரிஃப்ளெக்டரை யூஸ் பண்ணனும்னா பண்ணு... லாங் ஷின் எடுத்துரலாம். எங்க ஷில்பா...? வாம்மா... இப்படி வா. பரவாயில்லை மாடர்ன் ட்ரஸ்ல கிளாமர் இருக்கு... ஷில்பா மொத ஷாட்... நீ அந்த மலைச்சரிவிலேர்ந்து எறங்கி ஓடி வர்றே. ரெண்டு கையையும் விரிச்சிக்கிட்டு. காதலனைத் தேடி வர்றே... நீ பாட்டுக்கு அப்பனைத் தேடி வர்ற மாதிரி வந்துடாதே. போ... மலை மேல ஏறு... கால்ல செருப்பு வேணாம். கழட்டி வெச்சிரு. கீழ எறங்கறப்ப மிடி கொஞ்சம் மேலே தூக்கிக்கிட்டா ரெண்டு கையாலயும் துணியைப் புடிச்சிக்கப் போறே... வுட்டுடு... துணி பறந்தாத்தான் கவர்ச்சி... என்ன நான் சொல்றது... என்ன நான் சொல்றது?"

இளங்குமரன் சுற்றி இருந்தவர்களிடம் திரும்பிப் பார்த்துக் கேட்டான்.

"அம்சமா இருக்கும்ங்க" என்றான் சச்சிதானந்தம்.

"பாட்டா சார்?" என்று எச்சில் விழுங்கிக் கொண்டே கேட்டான் பிருத்விராஜ்.

"ஆமா! வேறே என்ன?"

"கதையில பாட்டெல்லாம் சரிப்பட்டு வராதே சார் —" என்று இழுத்தாற்போல் மெல்லிய குரலில் சொன்னான்.

"சொல்லிட்டாரு கேட்டுக்குங்க. சத்யஜித்ரே, மிருணாள்சென்னுக்கு அப்புறம் இவர்தான்யா. போ, கவருமெண்ட்டு பத்மபூஷனை வெச்சுக்கிட்டு 'எங்கே பிருத்விராஜ்,' 'எங்கே பிருத்விராஜ்'னு அலையுது. மார்ல குத்திக்கப் போ. யார்யா இவன்? பாட்டில்லாம ஒரு படமா? டிஸ்ட்ரிப்யூட்டர் பொட்டி இருக்கிற பக்கமே தலைவெச்சிப் படுக்க மாட்டான்......" என்று இளங்குமரன் கத்திவிட்டுத் தலையில் அணிந்திருந்த ஒரு சிவப்புத் தொப்பியை இழுத்து விட்டுக் கொண்டான்.

எங்கோ அருகில் இருந்த டேப் ரிகார்டரின் பட்டன் ஒன்று தட்டப்பட்டு, பேஸில் கிடாரின் நரம்புகள் துடித்து, ட்ரம் அதிர்ந்து, ஊடே ஒரு புல்லாங்குழல் நழுவி...

**காதல்நிலவே காதல்நிலவே சொந்தம் என்று வா.....**
**காமன் சுகத்தைக் கவிதை பாட சந்தம் கொண்டு வா.....**

இளங்குமரன் கண்களை மூடி, கவிதையை, கவிதையுடன் கலந்திருந்த ம்யூஸிக்கை ரசித்த நேரம், பிரதான சாலையில் இருந்து அந்தக் கார் வந்தது. அம்புதான், கல், முள் என்று எதையும் பொருட்படுத்தாமல், சத்தப்படுத்தாமல் வந்த அந்தக் கார் நிச்சயம் அயல் நாட்டில் இருந்து இறக்குமதி செய்யப்பட்ட காராகத்தான் இருக்க வேண்டும்.

கார், ஷில்பாவிற்கு ஒரு இன்ச் தூரத்தில் வந்து நின்றது.

"ஐயோ" என்று அலறினாள் ஷில்பா. ஷில்பாவின் ஃப்ரில் வைத்த சிவப்பு மிடி ஒரு முறை பதறியது. மேல் சட்டையின் மையப் பகுதியில் ஒன்றன்கீழ் ஒன்றாகத் தொங்கிய நீலப்பூக்கள் ஒருமுறை பதறின.

பாட்டு நின்று விட்டது.

இளங்குமரன் கண்களைத் திறந்து பார்த்தான்.

காரின் கதவைத் திறந்து கொண்டு அவன் இறங்கினான். அவன் முகத்தில் மிக லேசாகப் பெண்மை. லேசான செம்பட்டை நிறத்தில் மெல்லிய மீசை. மெல்லிய உதடுகள். ரோஜா நிறத்தில் இருந்தான்.

"ஹாய் அஸ்வின்குமார்" என்றான் இளங்குமரன்.

அஸ்வின்குமார் இளங்குமரனைக் கவனிக்கவில்லை. பார்வை ஷில்பாவின் மீது ஒட்டிக்கொண்டிருந்தது. ஷில்பாவை சென்டிமீட்டர் சென்டிமீட்டராக வருடியது. மேலிருந்து கீழ், கீழிருந்து மேல்.

அஸ்வின்குமார் சிரித்தான். மிக ஒழுங்கான பல்வரிசை.

"ஹாய் பேபி" என்றான்.

ஷில்பாவின் பின்பக்கத்தை வெகு சுவாதீனமாகத் தட்டினான்.

(தொடரும்)

# கீழ்ப் பகுதி

சூர்யா

வழக்கமாகத் தாள் போடப்பட்டிருக்கும் காம்பவுண்ட் கேட், இன்று திறந்தே கிடந்தது. உள்ளே நுழைந்தேன். எதிரே ஓடி வந்த இரண்டு குழந்தைகள் என்னை இடித்துக் கொண்டு சென்றார்கள். புதிய முகங்கள். முன்னால் ஓடியவனின் கையில் கவர்ச்சி நடிகை படம் போட்ட காலண்டர். அந்தக் காலண்டரைப் பிடுங்கத்தான் மற்றவன் துரத்திக் கொண்டு ஓடினான்.

என் போர்ஷனுக்குள் நுழைந்தேன். களைப்பாக இருந்தது. சட்டையைக் கழற்றினேன். என் மனைவி கௌரி கைக்காரியத்தை விட்டு வந்தாள்.

"என்ன... இத்தனை நேரம் கழிச்சு வர்றீங்க?"

"பரீட்சை வரப் போறதோல்லியோ... ஸ்டூடண்ட்ஸுக்கு ஸ்பெஷல் கிளாஸ் எடுக்க வேண்டியிருக்கு... தொண்டைத் தண்ணி வத்திப் போறது."

"எலிமெண்டரி ஸ்கூல்தானே? ஏன் அவ்வளவு சிரமப்படறேள்?"

"நம்மோட வேலையில யாரும் குறை சொல்லிடப்படாதோல்லியோ?"

"அதுவும் நிஜந்தான்" என்று முகம் அலம்பத் தண்ணீர் கொண்டு வந்து தந்தாள். முகம் துடைக்கத் துவாலையைத் தந்தவளிடம், "என்ன... காம்பவுண்டுக்குள்ள பக்கத்து வீட்டுப் பசங்கள் தான் விளையாடறது கள்? நம்ம வீட்டு வாண்டுகள் ரெண்டுத்தையும் காணோம்!" என்றேன்.

"அட விஷயம் தெரியாதில்லை உங்களுக்கு? முன் வீட்டுக்காரா காலி பண்ணிட்டா... அங்கே கிடந்து லூட்டி அடிக்கிறதுகள் எல்லாம்."

"என்ன திடீர்னு?"

"எப்பவோ காலி பண்ணியிருக்க வேண்டியவா. நீங்க வேலைக்குப் போயிடறேள். தெரிய வாய்ப்பில்லை. அவாளுக்கும், வீட்டுக்காரம்மாளுக்கும் சண்டை நடக்காத நாள் ஏதும் உண்டா என்ன?"

"நானும் ஒரிரு நாள் லீவில் இருக்கிறப்ப கவனிச்சிருக்கேன்."

"அதெல்லாம் வாய்ச் சண்டைதானே. நேத்திக்கு அடிதடி ஆகி ரோடே கூடிடுத்து... போலீஸ்காரா கூட வந்திருந்தா..."

"அப்படி என்ன திமிர்ப் பகை? சகஜமாத்தானே இருந்தாங்க?"

"சும்மா வெளிவேஷம்னா... உள்ளுக்குள்ளே புகைஞ்சுண்டுதான் இருந்திருக்கு."

"சொல்லு... நானும் அரசல் புரசலா சில விஷயங்கள் கேள்விப்பட்டேன்."

"கீழே எங்கள் போர்ஷனும் காலி பண்ணின 'டிஸோஸா' போர்ஷனும் மட்டும் தான். மேலே முழுக்க மொட்டை மாடியில் கூரை போட்டு, வீட்டுச் சொந்தக்காரம்மாள் குடும்பம் வசித்தது. பெரிய குடும்பம், மற்றவர்கள் சாது. கிழவிக்கு ஏக ஆகாத்யம். கூடவே, செட்டாகக் குடித்தனமும் பண்ணுவாள்.

முன்பு அவர்கள் குடும்பம் மட்டும் வசித்த ஓட்டு வீட்டை இடித்துத்தான் தற்போது நாங்கள் வசிக்கும் கீழ்ப்பகுதியைக் கட்டியிருந்தாள் கிழவி. எல்லாமே கடன் வாங்கித்தான். கீழே வாடகைக்கு விட்ட போது, டிஸோஸா குடும்பத்திடம் அட்வான்ஸ் மட்டுமில்லாமல், வட்டியில்லாக் கடனாக மேலே நாலாயிரம் ரூபாய் வாங்கிக் கொண்டாள். படிக்கட்டுகள் கட்டவும், மொத்த வீட்டுக்கும் சிமெண்ட் பூசவும், மேலும் சில அத்தியாவசியமான செலவுகளுக்கும் அந்தப் பணம் பயன்பட்டது.

டிஸோஸாவுக்கு, அம்பத்தூரில் ஓர் எக்ஸ்போர்ட் கம்பெனியில் மானேஜர் வேலை. நல்ல மனிதர். ஆனால், மகா அசடு. அவர் மனைவி லீலா பாட்டு டீச்சர். பிள்ளைகள் ஜீன்ஸ் போட்டுக் கொண்டு, சதா கவிங்கம் மென்று கொண்டு ஸ்போர்ட்ஸ் சைக்கிளில் சுற்றிவந்து ரோட்டில் போகிற பெண்களைக் கிண்டல் பண்ணி அடிதடி வாங்கி வருவார்கள். ஒரே பெண் — அது ஏதோ சினிமாவில் சான்ஸ் தேடுவதாகச் சொல்லிக் கொண்டார்கள். அடிக்கடி பலர் வீடு தேடி வந்து போவார்கள். அதில்லாமல் அந்தப் பெண் ஏதோ பிராத்தல் கேஸில் மாட்டிக் கொண்டதாக வதந்தி. வீட்டு வாசலில் வந்து நின்று கத்தும் கடன்காரர்கள் ஒரு பக்கம்.

அவர்கள் வீட்டில் சமையல் செய்து யாரும் பார்த்ததில்லை. எப்போதும் ஹோட்



டலிலிருந்து எடுப்புச் சாப்பாடுதான். அடிக்கடி வீட்டில் டிரிங்க்ஸ் பார்ட்டி வேறு. ஆக, தெருவெல்லாம் இவர்களைப் பற்றியே பேச்சாக இருந்தது.

கிழவி வாங்கிய கடனை, வாடகையில் கழித்துக் கொண்டே வந்தார்கள். கடன் தீருகிற வரை அடங்கிக் கிடந்த கிழவி, அதற்கப்புறம் அடிக்கடி வம்புச் சண்டைக்கு இழுக்க ஆரம்பித்து விட்டாள். வாடகைக்குக் குடியிருப்பவர்களிடம், சொந்தக்காரி கடன் வாங்குவதாவது என்ற திடீர் ஞானோதயம் போலும்.

நேற்றுதான் சண்டை முற்றி, ''அடப் பாவிங்களா... இந்தத் தெருவுல எத்தனை வருஷமா கௌரவமா இருக்கோம். என் வீட்டுப் பெயரையே கெடுத்துட்டீங்களே!'' என்று கிழவி ஓலமிட்டு அலற, டிஸோஸா குடும்பம் கடுமையாகப் பதிலடி கொடுக்க, வாய்ப் பேச்சு முற்றிக் கைகலப்பாகி, போலீஸ் வந்து ஒரு மாதிரியாக டிஸோஸா குடும்பம் வெளியேற்றப்பட்டது.

**வி**ஷயத்தைச் சுருக்கமாகச் சொல்லி முடித்த கௌரி, சேமியா பாயசம் கொண்டு வந்து தந்தாள்.

''என்ன விசேஷம்?''

''விசேஷமாவது! பழைய பிளாஸ்டிக் சாமானெல்லாம் போட்டேன். சேமியா குடுத்தான். அதில்லாம, வீட்டுல காப்பிப் பொடி தீர்ந்து போச்சு — அதான் இருக்கிற பால்ல சேமியா, சர்க்கரையைக் கலந்துட்டேன்.''

''முதல் தேதிக்கு நாலு நாள்தானே இருக்கு... வாங்கிடலாம்.''

''கெரோஸின் கூடத் தீர்ந்து போச்சு. நாலைந்து நாளா விறகு அடுப்புலதான் சமையல்.''

''எங்கேயாவது கடன் வாங்கலாமா?''

''அதைவிடப் பட்டினி கெடக்கலாம்... நம்ம பேரை உச்சரிச்சு ஒரு கடன்காரன் வாசற்படியில் வந்து நின்னுடக் கூடாதுங்க'' என்று உறுதியோடு சொன்னாள் கௌரி.

''சரி... சரி... வருத்தப்படாதே'' என்று அவளைச் சமாதானப்படுத்தினேன்.

அப்போது 'கௌரி' என்ற குரல் கேட்டது. வீட்டுக்காரக் கிழவிதான். வாயு உடம்பு. ஏராள அகலம். சிரமப்பட்டு எட்டிப் பார்த்தான்.

''வாங்கம்மா... என்ன விசேஷம்?''

''ஒண்ணுமில்லே... அதான், அந்தச் சனியனுங்க காலி பண்ணிருச்சே... அந்த வீட்டைக் கழுவி விடலாம்னு.''

''ஆமாம். பண்ணிட வேண்டியதுதான்.''

''எங்க வீட்டுல தென்னந்துடைப்பம் இல்லே... உன்கிட்டே இருக்குமே...?'' கிழவி உள்ளே வந்தாள்.

''இதோ தர்றேம்மா...''

கௌரி, துடைப்பத்தைக் கொண்டு வந்து தந்தாள். அதை வாங்கி அடிப்பாகத்தைத் தட்டிக் கொண்டே கிழவி, எங்கள் போர்ஷனின் சமையலறையாகப் பயன்பட்ட தாழ்வாரச் சுவரைப் பார்த்தாள். கண்களில் கோபம் மின்ன எங்களைப் பார்த்து, ''அட... அக்கிரமமே! கிராமாந்திரத்து வீடு மாதிரி சுவர் முழுக்க இப்படி விறகடுப்புப் புகையைப் படிய விட்டிருக்கீங்க...? என்னா அநியாயம் பாரேன்... ஊட்டை இப்படி அசிங்கம் பண்ணி வெச்சிருக்கீங்களே... காலி பண்ணின டிஸோஸா ஊடு எவ்வளவு சுத்தமா இருக்குது தெரியுமா?'' என்று சலித்துக் கொண்டாள்.

# தன்னம்பிக்கை



ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். என்னால் இயலாது என்று ஒரு நாளும் சொல்லாதீர்கள். நீங்கள் வரம்பில்லா வலிமை பெற்றவர்கள். எதையும், எல்லாவற்றையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நீங்கள்.

மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும் போது ஆணோ, பெண்ணோ வரலாற்றில் சிறப்புடன் விளங்கினார்கள் என்றால் அதற்கு முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கைதான் என்று சுவாமி விவேகானந்தர் வீர முழக்கமிடுகிறார்.

ஆனால் நம்மில் பலர் ஓரளவு கல்வித் தகுதியிருந்தும் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் பேசத் தயங்குகிறார்கள்.

தவறாகப் பேசி விடுவோமோ என்ற பயமும், முறையான பயிற்சியின்மையுமே இத்தயக்கத்திற்கான முக்கியமான காரணங்களாகும்.

உங்களது இத்தயக்கத்தைப் போக்கி நீங்கள் ஆங்கிலத்தில் சரளமாக உரையாட, இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத விவேகானந்தா கல்வி நிலையத்தினர் தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள். நேர்முகப் பயிற்சியும் உண்டு. இப்பயிற்சியைப் பற்றி மேலும் தகவல் அறிய விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்குக் கடிதம் எழுதி இலவசமாக தகவல் புத்தகத்தைப் பெற்றுப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெறலாமே!

**விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)**

9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை-600 017

**ஸி**. ஆர். நேருவுக்கு எழுதினார்:

''தங்களுக்குச் சங்கேத முறையில் நான் செய்தி அனுப்பிய பிறகு இங்கே ஏகப்பட்ட அழுத்தம் உருவாயிற்று. எனக்கு இரண்டு வழிகளே இருந்தன. ஒன்று, என்ன வேணுமானாலும் நடக்கட்டும்; நாடு எக்கேடு கெட்டேனும் போகட்டும் என்று அலட்சியமாக இருப்பது; மற்றொன்று, விதியையும் ஆண்டவனையும் நம்பி, 'சரி' என்று கூறி அதனால் எனக்கு ஏற்படக் கூடிய கஷ்ட நஷ்டங்களை ஏற்பது. நான் இரண்டாவது வழியைப் பின்பற்றினேன்....

''மக்களிடம் நம்பிக்கையைத் தூண்டக் கூடிய ஒரு மந்திரி சபையை அமைக்க முயன்று வருகிறேன். இது சிரமமான காரியமாய் இருக்கிறது. போதிய அளவில் தரம் மிக்க நபர்கள் கிடைப்பது அரிதாயுள்ளது....

எனக்குள் ஒரு குரல் ஒலித்தது: 'ஏன் அஞ்சுகிறாய்? கடவுளிடம் உனக்கு நம்பிக்கை குறைந்து விட்டதா என்ன?' என்று கேட்டது.''

அமைச்சரவையில் இடம் பெறப் போகிற நபர்கள் பற்றி ஜவாஹர்லாலுக்குத் தெரிவிக்கப்பட்டது. ஆனால் கடைசி நிமிஷ மாற்றங்கள் செய்யும் உரிமை தமக்கு இருப்பதை ஸி. ஆர். தெளிவுபடுத்தியிருந்தார். ஜவாஹர்லால் எல்லா முடிவுகளையும் ஸி. ஆர். பொறுப்பிலேயே முழுக்க முழுக்க விட்டு விட்டார். 'காமன் வீல்' கட்சியின் தலைவர் மாணிக்க வேலு நாயக்கர் தவிர அமைச்சரவையில் மற்றவர்கள் காங்கிரஸ்காரர்களே. 'காமன் வீல்' கட்சிக்கு ஆறு எம்.எல்.ஏ.க்கள் இருந்தனர். சுயேச்சையானவரும் மிகுந்த மதிப்புக்குரியவருமான லக்ஷ்மண சுவாமி முதலியாருக்கு அமைச்சரவையில் இரண்டாம் இடம் தந்து சேர்த்துக் கொள்வதில் ராஜாஜி ஆர்வம் காட்டினார். ''நிர்வாக விஷயங்களில் அவர்

# 4

# ''கம்யூனிஸ்டுகள் என் முதல் எதிரி!''

மந்திரி சபை அமைக்கப்பட்ட பிறகு ஒரு நிருபர் ஸி. ஆரைக் கேட்டார்: ''நீங்கள் சந்தோஷமாக இருக்கிறீர்களா?''

''நான் கிளர்ச்சி அடைந்திருக்கிறேன்'' என்றார் ராஜாஜி. ''அதனை மகிழ்ச்சி என்று கூற முடியாது. கிளர்ச்சி அளவுக்கு அதிகமானால் குழப்பத்தில் முடியும்!''

இதற்கிடையில் வாழ்த்தும் நம்பிக்கையும் தெரிவித்துச் செய்திகள், கடிதங்கள், தந்திகள் குவிந்த வண்ணம் இருந்தன. அன்றிரவு ஸி. ஆர். வானொலியில் பேசிய போது கூறினார்: ''வாழ்த்தும் மகிழ்ச்சியும் தெரிவிக்கும் தந்திகள், கடிதங்களைப் பார்த்த போது நான் 'எப்பேற்பட்ட பொறுப்பு' என்று பயந்து நடுங்கினேன். ஆனால்

* லக்ஷ்மணசுவாமி முதலியார்: இரண்டாம் இடம் ஏற்க முடியாது.



மிகவும் உபயோகமாய் இருப்பார்; என் சுமை பெரிதும் குறையும்'' என்று ராஜாஜி நேருவுக்கு எழுதினார். அது சிறந்த ராஜ தந்திரமே. முதலியாருக்குப் பிராமணர்களிடையேயும் சரி, பிராமணர் எதிர்ப்பு வட்டாரங்களிலும் சரி, நிறைய மதிப்பும் மரியாதையும் உண்டு. அவர், அமைச்சரவையில் இருந்தால் பிராமணர் எதிர்ப்பு வட்டாரங்கள் ஸி. ஆருக்குக் காண்பிக்கக் கூடிய எதிர்ப்பு வலுவிழந்து போகும். ஆனால் முதலியார் அழைப்பை ஏற்க மறுத்து விட்டார்.

கம்யூனிஸ்டுகள் தவிர மற்ற அனைவரது ஒத்துழைப்பையும் கோரினார் ஸி. ஆர். பிரகாசத்துக்குப் பகிரங்கமான அழைப்பு விடுத்தார். பிரகாசம் அதனை நிராகரித்தது வியப்பளிக்கவில்லை. ஆனால் பல சுயேச்சைகளும் சிறிய கட்சிகளைச் சேர்ந்தவர்களும் ராஜாஜியின் கோரிக்கையை ஏற்று ஒத்துழைப்புத் தந்தனர். இத்தனைக்கும் மாணிக்கவேலு நாயக்கர் தவிர இவர்களில் வேறு யாருக்கும் பதவி தரப்படவில்லை. பத்தொன்பது எம்.எல்.ஏ.க்கள் கொண்ட உழைப்பாளர் கட்சி, என். ஜி. ரங்காவிடம் விசுவாசம் பூண்ட பதினைந்து தெலுங்கு எம்.எல்.ஏ.க்கள் முதலியோர் ஸி. ஆருக்கு ஆதரவாக நின்றனர். மாணிக்க வேலு நாயகர் கட்சியினர், சட்ட சபை



* என். ஜி. ரங்கா: ஸி. ஆருக்கு ஆதரவு.

காங்கிரஸ் கட்சியின் இணை அங்கத்தினர்கள் ஆனார்கள். கூட்டணி ஆட்சி அமைப்பதே நியாயமாக இருந்திருக்கும். இதற்கு ஸி. ஆர். தயாராகவே இருந்தார். நேருவிடமும் இது பற்றிக் கூறினார். ஆனால் காங்கிரஸின் கௌரவம் இதற்கு இடம் தரவில்லை. காங்கிரஸ் அமைச்சரவை அமைந்ததாக அவர்கள் பெருமைப்பட வேண்டியிருந்தது.

''சிக்கலிலிருந்து நாம் மீண்டு விட்டதாகக் கூற முடியாது'' என்று ஆளுனர் ஜனாதிபதிக்கு எழுதினார். ''சட்டசபை கூடிய பிறகு என்ன நடக்கும் என்று பார்க்க வேண்டும்; எல்லாம் அதைப் பொருத்துத் தான் இருக்கிறது.''

**ஆ**ளுனர் கவலைப்பட்டிருக்கவே வேண்டாம். சட்டசபை கூடிய முதல் தினத்திலிருந்தே ஸி. ஆருக்குப் பெரும்பான்மை பலம் இருப்பது புரிந்து போயிற்று. பின்னால் ஸி. ஆர். நம்பிக்கைத் தீர்மானம் கொண்டு வந்து வோட்டுக்கு விட்ட போது இருநூறு பேர் ஆதரவாகவும் 151 பேர் எதிர்த்தும் வாக்களித்தனர்.

காங்கிரஸ்*க்கு ஆதரவு தந்த பல சிறிய கட்சிகளுக்கும் சுயேச்சைகளுக்கும் உள்ளூர கம்யூனிஸ்டுகளைப் பற்றிய பயம் இருந்தது. வெளிப்படையாக இதை அவர்கள் கூறவில்லை எனினும் ஸி. ஆர். புரிந்து கொண்டார். இந்தப் பயத்தையே அவர் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு அவர்களுடைய ஆதரவை உறுதிப்படுத்திக் கொண்டார். தமது முதல் சட்டசபை பேச்சிலேயே அவர் சொன்னார்:

''கம்யூனிஸ்டுகளினால் இந்த நாட்டுக்கு ஏற்படக் கூடிய அபாயங்களிலிருந்து அதனைக் காப்பாற்றவே நான் இங்கு இருக்கிறேன். அவர்கள் வைக்கின்ற பொறிகளில் சிக்க யாரையும் அனுமதிக்க மாட்டேன். (கை தட்டல்) இதுதான் என்னுடைய முதலும் முடிவானதுமான கொள்கை. நான் பகிரங்கமாக கம்யூனிஸ்டுகளுக்கு அறிவிக்கிறேன்: நீங்கள் என்னைத்தான் உங்களுடைய முதல் எதிரியாகக் கருதுகிறீர்கள்; நீங்கள்தான் என்னுடைய முதல் எதிரி என்று நானும் சொல்கிறேன். இதுவே எனது கொள்கை.

''கம்யூனிஸ்டுகளின் கொள்கை என்ன? ஒவ்வொரு கஷ்டத்தையும் ஒவ்வொரு அதிருப்தியையும் ஒவ்வொரு புகாரையும் எடுத்துக் கொண்டு, அவற்றை ஊதி விட்டு, அளவுக்கு மீறிப் பெரிதாக்கி, திரும்பத் திரும்பக் கூறி, கண் காது வைத்துப் பூதாகார வடிவம் எடுக்கச் செய்வதுதான்!''

இதற்குப் பிறகு ஐக்கிய முன்னணியின் எதிர்ப்பானது ஆக்கிரமிப்பு நிலையிலிருந்து தற்காப்பு நிலைக்குத் தாழ்ந்து போயிற்று. எதிர்க் கட்சித் தலைவராக இருந்த நாகிரெட்டி ராஜினாமா செய்தார். அவரிடத்துக்குப் பிரகாசம் கட்சியைச் சேர்ந்த தென்னடி விசுவநாதம் வந்து சேர்ந்தார். 'ஐக்கிய முன்னணியை கம்யூனிஸ்டுகளே ஆக்கிரமித்து ஆளுமை செலுத்துகிறார்கள்' என்ற குற்றச்சாட்டை மறுத்துப் பதில் சொல்லவே இவருக்கு நேரம் சரியாக இருந்தது.

**பொ**து மக்களைப் பொருத்தமட்டில் உணவுக் கட்டுப்பாடுதான் பெரும் பிரச்னையாக இருந்தது. ரேஷன் கடைகளில் 'கியூ' வரிசை நீண்டதும், பொதுச் சந்தையில் விலைவாசிகள் உயர்ந்ததுமே காங்கிரஸ் தேர்தலில் வீழ்ச்சி அடைந்ததற்கு முக்கிய காரணம். ஸி. ஆர். பதவிப் பிரமாணம் ஏற்ற தினத்தன்றே ஒரு நிருபர் அவரிடம், ''ரேஷனில் தரப்படும் உணவுப் பொருள்களின் அளவு அதிகரிக்கப்படுமா?'' என்று கேட்டார். ''நீங்கள் மழைக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டும்'' என்று பதிலளித்தார் ஸி. ஆர். அன்றிரவு வானொலி பிரசங்கத்திலும் அதே கோரிக்கையை மக்கள் முன் வைத்தார். ''சகோதர சகோதரிகளே! மழைக்காகப் பிரார்த்தனை செய்யுங்கள். நமது நாட்டில் உள்ள ஏழைகளுக்காகவும் துன்பத்தில் ஆழ்ந்திருப்பவர்களுக்காகவும் பிரார்த்தனை செய்யுங்கள்.''

ராஜாஜியின் இறையுணர்வு சட்டசபையில் கம்யூனிஸ்ட்களால் கேலி செய்யப்பட்டது. ''ராஜாஜி தலைமை ஏற்றுக் கொண்டார் என்பதில் காங்கிரஸ்*க்கு நிம்மதி; கடவுள் தலைமை ஏற்றிருக்கிறார் என்பதில் ராஜாஜிக்கு நிம்மதி!'' என்று ஒரு கம்யூனிஸ்ட் அங்கத்தினர் நையாண்டி செய்தார். ''மழை பெய்யச் செய்ய, இதை விட நல்ல உபாயத்தை என்னை நையாண்டி செய்பவர்கள் வைத்திருக்கிறார்களா?'' என்று திரும்பிக் கேட்டார் ராஜாஜி. ''இத்தகைய பரிகாசமோ, அரைகுறை அறிவோ எனக்குக் கடவுளிடம் உள்ள நம்பிக்கையை அசைத்து விட முடியாது'' என்று உறுதியாகச் சொன்னார்.

பிரார்த்தனையின் பலனோ அல்லது மக்களின் அதிர்ஷ்டமோ, எவ்வாறானாலும் சரி, மே மாதத் தொடக்கத்திலேயே மழை கொட்டோ கொட்டென்று கொட்டியது! மக்கள் தங்கள் கண்களையே நம்ப முடியாமல் அதிசயத்தில் ஆழ்ந்து போயினர்!

(தொடரும்)

# இருள் வரும் நேரம்

## 20

ராம்பிரகாஷ் மௌனமாகப் பார்த்துக் கொண்டிருக்க, விஜிராவ் அவரைப் பார்த்துப் புன்னகை புரிந்து, "ப்ரொபஸர், எம் பேரு கோவர்த்தன ராவ். ஐ'ம் எ லாயர். உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கேன். உங்களைச் சந்திக்கிறதில ரொம்ப சந்தோஷம். இவங்கதான் உங்க...!"

"ராவ், வந்த காரியத்தைச் சுருக்கமாச் சொல்லுங்க" என்றார் சோமசேகர்.



"என்ன சார் இது அநியாயம்! இந்த அறியாத பிள்ளைங்க ரெண்டு பேரையும் சாட்சி, வாரண்டு எதுவும் இல்லாம புடிச்சு வெச்சிருக்கிறதா நஞ்சப்பா சொன்னார். திஸ் ஈஸ் த லிமிட்! அட்ரோஷியஸ்! கமிஷனர், இந்த நாட்டில நீதி, நேர்மைன்னு ஏதும் பாக்கியிருக்கா? ப்ரொபஸர், எக்ஸ்க்யூஸ் மீ, உங்க மனைவிக்கு நிகழ்ந்ததைப் பற்றி நான் ரொம்ப அனுதாபப்படறேன். ஆனா, அதுக்காக இவங்க அந்தக் குற்றத்தோட ஏதும் சம்பந்தமே இல்லாத...

"ராவ், பழையபடி குறும்பை ஆரம்பிக்கிறீங்களே! இந்த கேஸ்ல குறுக்கிடாதீங்க. வி ஆர் வெரி வெரி ஷ்யூர். நஞ்சப்பாவுடைய ரௌடிங்களுக்கெல்லாம் நீங்க வக்காலத்து வாங்கறது உங்க காரியருக்கு நல்ல இல்லை!" என்றார் சோமசேகர்.

"ஐ டிமாண்ட் எ வாரண்ட்!" என்றார் ராவ். அவர் மூக்கு நுனி அடிக்கடி சிந்தியதால், சிவந்திருந்தது. கச்சிதமாகக் கண்களில் துருதுருப்பாக, இரை தேடும் எலி போல இருந்தார்.

"உங்க புரட்டெல்லாம் செல்லாது ராவ்!" என்றார் தர்மராஜன்.

"ஸாரி தர்மராஜன்! உங்க பேரு தர்மராஜனே ஒழிய, நீங்க காரியமெல்லாம் எம தர்மராஜன் மாதிரி பண்றீங்க. நாங்க இந்தக் கேஸை விட மாட்டோம். சம்பவம் நிகழ்ந்த அன்னைக்கு ரெண்டு பேரும் தொட்டபளாபூர்ல இருந்திருக்காங்க. நஞ்சப்பா சொல்லியிருக்கார். அவர்தான் அனுப்பிச்சார். பாருங்க, பஸ் டிக்கெட்."

"பஸ் டிக்கெட் காட்டினா அவங்க போயிருந்ததா எப்படி நிரூபிக்க முடியும்? கமான், விஜி, பொய் சொல்றதுக்கும் ஒரு எல்லை வேணும். சொல்றதைக் கேளுங்க, இது ஒப்பன்-அண்ட் ஷட் கேஸ். ரொம்ப ரொம்ப ஸ்ட்ராங்கா எவிடன்ஸ் இருக்கு; இதில குறுக்கிடாம இருக்கிறது உமக்கு நல்லது."

"என்ன எவிடன்ஸ்?"

"அதை நாங்களெதுக்கு உங்ககிட்ட சொல்லணும்?"

"பசங்களை அரஸ்ட் பண்றீங்களா?"

"பண்ணியாச்சு!" தர்மராஜன் அவரைத் தனியாக அழைத்தார்.

"நாளைக்கு முதல் காரியமா மாஜிஸ்திரேட் கோர்ட்டில் கேஸ் ப்ரொட்யூஸ் பண்ணி, போலீஸ் கஸ்டடியிலிருந்து அடிச்சு உதைச்சு உண்மையை ஒப்புத்துக்க வெச்சுருவீங்க, அப்படித்தானே?"

"தேவையே இல்லை. அவங்களாகவே ஒப்புத்துக்குவாங்க. என்னடா பாபு?"

"பாபு, பால்குண்டு! பேசாம இருங்க! ஒரு ராத்திரி ஜெயில்ல இருங்க. அடி உதைன்னா சொல்லுங்க, பேப்பர்ல போட்டுடலாம். காலையில நஞ்சப்பா வந்து பார்க்கறேன்னாரு."

அவர் போனதும் ராம்பிரகாஷ் வியப்புடன், "இவர் யாருங்க?" என்றார்.

"இவர் ஒரு தவிர்க்க முடியாத பிரஜை. பேரு கோவர்த்தன ராவ். ரௌடிங்க, ப்ராஸ்டியூட்டுங்க, ஊர்ல உள்ள அத்தனை கேடிங்களுக்கும் வக்காலத்து வாங்கறது, ஸ்லாண்டர் பண்றது, பேப்பர்ல லெட்டர்ஸ் டு தி எடிட்டர் எழுதறது, எல்லாம் இவர் தொழில், பொழுது போக்கு!"

ராம்பிரகாஷ் தயக்கமாக, "வேண்டாம் ஸார்; இந்த மாதிரி ஆளுங்களோட எதிர்ப்பு ஏதும் வேண்டாம்னு தோணுது." என்றார்.

"நீங்க வேற! இவங்களுக்கெல்லாம் பயந்தா கோர்ட்டில யாருமே குற்றவாளிங்களைத் தண்டிக்க முடியாது. என்ன நீங்க! இதெல்லாம் சகஜம்."

"ரொம்ப அசிங்கம் பண்ணிடுவாங்க போல இருக்கே?"

"ப்ரொபஸர், என்ன பண்றது? வி ஹாவ்

**சுஜாதா**

டு கோ த்ரு திஸ்! சட்டம்ங்கிறது சாக்கடை யில வைரம் எடுக்கிற மாதிரித்தான்.''

''சாக்கடையும் வேண்டாம், வைரமும் வேண்டாம். ப்ளீஸ், எங்களை விட்டுடுங்க! நாங்க எங்கே வேணா கையெழுத்துப் போட றோம்! அம்ரு, வா போகலாம்.''

அம்ருதா, ''ஸார், உங்களைக் கெஞ்சிக் கேட்டுக்கறேன். இந்தக் கேஸை நீங்க எடுத்து நடத்தணும். இவர் எதுக்காக இதை ரத்து செய்யணும்னு சொல்றார்ங்கறது எனக்குத் தெரியும். உண்மை வெளியே வந்துடும். அதுக் காகப் பயப்படறார். எல்லாமே என் கண வரும் அந்தப் பொண்ணும் சேர்ந்து, செய்த சதி ஸார்!''

''இவ வேறப்பா!'' என்று டாக்டர் சலித் துக் கொண்டார்.

சோமசேகர் புன்னகையுடன் ''கமான் டோண்ட் டெல்மி தட்! நாங்க ஒரு நிமிஷம் கூட அந்த மாதிரி ஆங்கிள்ள இந்த கேஸைப் பார்க்கவே இல்லை மிஸஸ் ராம்பிரகாஷ்.''

''உங்களுக்குத் தெரியாது. கடைசியில் அது தான் உண்மையா வெளிவரப் போகிறது. அதுக்குப் பயந்துதான் வேண்டாம், வேண் டாம்னு இவர் ஒதுங்கறார். கேஸை நீங்க நடத்தி ஆகணும். நான் எங்கே வேணா வந்து சாட்சி சொல்லத் தயார்.''

ப்ரொபஸர் கொஞ்ச நேரம் அம்ருதாவை நம்பிக்கையில்லாமல் பார்த்தார்.

''அடிக்கப் போறீங்களா, எல்லார் முன் னாலயும்?'' என்றாள்.

''அம்ரு, ப்ளீஸ்...!''

''அன்றைக்கு சைக்கியாட்ரிஸ்ட்டைக் கூட்டிக்கிட்டு வந்து, அவர் முன்னால அடிச் சாச்சு. இப்ப போலீஸ் ஆபீஸர் முன் னால...''

சோமசேகர் சந்தர்ப்பத்தை உணர்ந்து, ''மிஸஸ் ராம்பிரகாஷ், நீங்க ரொம்ப அஜி டேட்டடா இருக்கீங்க. அதனாலதான் உங்க ளுக்குத் தப்புத் தப்பா சந்தேகங்களெல்லாம் ஏற்படறது,'' என்றார்.

''ப்ளீஸ், நீங்களும் அந்தச் சதியிலே சேர்ந் துடாதீங்க ஸார்!''

''மாட்டோம், கவலைப்படாதீங்க'' என்று ஒரு குழந்தையின் விளையாட்டை ரசிப்பது போல் சிரித்தார். ''நீங்க எப்ப கோர்ட்டுக்கு வரணும்ங்கிறதை கான்ஸ்டபிள் வீட்டுக்கு வந்து சொல்வார். உங்களுக்கு அசௌகரி யம் அதிகம் இல்லாம பார்த்துக்கறோம். கோவர்த்தன் மாதிரி ஆளுங்களையெல்லாம் பார்த்து பயப்படாதீங்க, ப்ரொபஸர். இவங் கள்லாம் நம் நீதி அமைப்பில் தவிர்க்க முடி யாத அம்சங்கள்!''

அவர்கள் கிளம்பிச் சென்றதும் சோம சேகர் பால்குண்டுவின் அருகில் வந்து கண் கொட்டாமல் பார்த்தார். தர்மராஜன் அவர ருகில் நிற்க, பால்குண்டு சோமசேகரை நேரில் பார்க்க இயலாமல் தரையையே பார்த் துக் கொண்டிருக்க, அவன் தாடையை நிமிர்த்தி, ''பேர் என்ன சொன்ன பால் குண்டா! உன் முகத்தில பால் வடியற தில்லை, ஏண்டா?'' என்றார்.

''வக்கீலய்யா! வக்கீலய்யா! என்று பால் குண்டு விளித்தான்.

''கோவர்த்தன் ராவ் உள்ளே வந்தார். ''என்ன ஸார், தர்ட் டிகிரியா?'' என்றார்.

''ராவ், லிஸன்! இவங்களைப் போய் டிஃபெண்ட் பண்ணாதீங்க. உங்க தொழி லுக்கு ஒரு மரியாதை கொடுங்க.''

''டிஸிபி ஸார்! நீங்க உங்க தொழிலுக்கு மரியாதை கொடுத்தா நாங்களும் கொடுப் போம். நான் ஸ்தலத்தை விட்டுப் போனப் புறம் அவனவங்களை என்ன பண்ணப் போறீங்க, தெரியாதா? உப்பார்பேட் போலீஸ் ஸ்டேஷன்ல கொண்டு போய் லாக்கப்பில வெச்சு நிமிர்த்திடுவீங்க. ஊமை அடி! சைக்கிள் ட்யூப்ல மண்ணை ரொப்பி...''

தர்மராஜன் குறுக்கிட்டு: ''உங்க மாதிரி விவஸ்தையில்லாத லாயர்ங்க ஏதாவது



சட்டத்தில் ஓட்டையைக் காட்டி இவங்க மாதிரி ஆளுங்களுக்கு விடுதலை வாங்கிக் கொடுக்கிறதினாலதான் நாங்கள்லாம் ரஃப்பா இருக்க வேண்டியிருக்குது!''

''தர்மு கொஞ்சம் சும்மாயிருப்பா!''

''அது எப்படி ஸார்! நீங்க இவங்கதான் குற்றவாளின்னு சொல்ல முடியும்? சம்பவம் இருட்டில நடந்திருக்கு. யார் மூஞ்சியையும் யாரும் பார்த்ததில்லை. பாபு, ஆட்டோ ஓட்டினான்ங்கிற ஒரே ஒரு சாட்சியைத் தவிர வேறே ஏதாவது இருக்கா?''

''நிறைய இருக்கு விஜி!''

''பார்த்துடலாம் ஸார்! எங்கிட்டேயும் நிறைய சாட்சி இருக்கு!''

''சந்தோஷம்.''

''அந்தம்மாவுக்கும் பால்குண்டுவுக்கும் ஸினேகிதம் இருக்கிறதா நான் நிரூபிக்க றேன்னு வெச்சுக்கங்க. அப்ப நடந்தது ரேப் ஆகுமா, சொல்லுங்க?''

சோமசேகர் நம்பிக்கையில்லாமல் கோவர்த்தன ராவைப் பார்த்தார்: ''விஜி, நீ இன்னும் அந்த லெவலுக்குப் போக மாட்டேன்னு நெனைக்கிறேன்.''

''நஞ்சப்பா ஸார்! நஞ்சப்பா!''

''சோமசேகர்! சொல்றதைக் கேளுங்க, ட்ராப் இட்! திஸ் கேஸ் ஈஸ் வெரி ஹாட்; நீங்கதான் வருத்தப்படுவீங்க.''

''பார்க்கலாம்.''

''கண்ணா, ஜெயில்ல அடிச்சாங்க, பேசாம உதை வாங்கிக்கங்க. ஆனா வாயைத் திறக்காதீங்க. எதிலேயும் கையெழுத்துப் போட வேண்டாம். நாளைக்குப் பதினொரு மணிக்குள்ளே உங்களை மாஜிஸ்திரேட் முன்னால நிறுத்தி கஸ்டடி வாங்கிக்கணும்... அதுக்குள்ளே வந்துடுவேன். ஸார்,



காலைல கைதிங்களுக்குக் காப்பி டீப்பி வாங்கிக் கொடுங்க, பட்னி போடாதீங்க. எனக்கு ஜோலி இருக்கு, வர்றேன்.''

அவர் போன திசையைச் சோமசேகர் பார்த்து, ''இந்தாளை உள்ளே போட முடியாதா, தர்மு?'' என்று கேட்டார்.

''முடியாது'' என்றார் தர்மு சிக்கனமாக.

கோவர்த்தன் ராவ் கமிஷனரின் அலுவலகத்தை விட்டு வெளி வந்தவர், அவசரமாக ப்ரொபஸர் ராம்பிரகாஷைத் தேடிச் சென்றார். ப்ரொபஸரும் அம்ருவும் மௌனமாக பியட் காரில் ஏறிக் கொண்டிருக்கிற சமயம் பார்த்து, ''ஸார், ஒரு விஷயம்'' என்று தடுத்து நிறுத்தினார்.

''என்ன?''

''ஒண்ணுமில்லே, இந்த கேஸ்ல அவங்க சாட்சி சொல்லப் போறாங்களா?''

''ஆமாம்!''

''அதனுடைய பலாபலன்கள் எல்லாம் தெரியுமா உங்களுக்கு?''

''தெரியாது, தெரிஞ்சுக்க விருப்பமில்லை.''

''அனாவசியத்துக்கு எதுக்காக, புஷ்பம் மாதிரி இருக்காங்க, அவங்களைக் கோர்ட்டில் கொண்டு வந்து நிறுத்தறீங்க?''

''நான் நிறுத்தலைய்யா, அந்தம்மாதான் நிக்கணும்ங்கிறாங்க.''

''அம்ருதா கவனிக்காமல் நேர்ப் பார்வை பார்த்துக் கொண்டிருக்க,

''பேசாம அவுட் ஆஃப் கோர்ட் செட்டில் பண்ணிரலாமில்லை...?''

''என்ன செட்டில்?''

''நஞ்சப்பா தெரியுமில்லை, நஞ்சப்பா?''

''தெரியாது!''

''என்ன ஸார், நஞ்சப்பா தெரியாதுங்கறீங்க! டாக்டரா இருக்கீங்க, இன்றைக்கு அவர் பேர்ல மூணு மெடிக்கல் காலேஜ் வேற வேற ட்ரஸ்ட்ல நடறது. நாலூறு வீடு கொண்ட ஒரு காலனி. அப்புறம் ஒரு பத்திரிகை. எதுக்காக அவரைப் போய் எதிர்த்துக்கணும்? சொல்லுங்க. இந்தப் பால்குண்டு நஞ்சப்பா ஆளு. தங்கமான பையன் ஸார். இது ஃபால்ஸ் கேஸ். போலீஸ்காரங்க கேஸை முடிக்கணும்ங்கிறதுக்காக இந்த வேலைத்தனம் காட்டறாங்க. அந்த 'ட்ராப்'ல போய் ஆப்டுக்கறீங்க நீங்க. உங்களுக்கும் நிம்மதி, எங்களுக்கும் நிம்மதி. அதை அவுட் ஆப் கோர்ட்டா செட்டில் பண்ணிர்றதுதான். உத்தமம்! இல்லைன்னா ரொம்ப...''

''என்ன ஆகும்? சரியா, பலமாச் சொல்லுங்க விஜிராவ்! என் மனைவியும் கேட்டுக்கட்டும்.''

''என்ன என்னவோ ரசாபாசமான விஷயங்கள்லாம் வெளியே கொண்டுவர வேண்டியிருக்கும்!''

ப்ரொபஸர், ''கேட்டியா அம்ரு, இது ஒரு சாக்கடை, இதை அவாய்ட் பண்ணணும்ங்கிற நல்ல எண்ணத்திலதான்...'' என்று இழுத்தார்.

''காரை ஸ்டார்ட் பண்றீங்களா?'' என்றாள் அம்ருதா.

(தொடரும்)

# மாலைப் பொருத்தம்

"மாமா, மதுரை மீனாட்சியம்மன் கோவில் பக்கத்திலே, மேலமாசி வீதியிலே ஒரு ஜோசியர் இருக்காராமே...?"

"ஆமா... நம்ம சிறுவாலை அய்யரோட சிஷ்யர்!"

"நல்லா ஜாதகம் பார்ப்பாரா...?"

"பிரமாதமாய்ப் பார்ப்பார் மாப்பிள்ளை... உங்க மூத்த தங்கச்சி ஜெயாவோட ஜாதகத்தைக் கூட, அம்மா இங்கே வந்திருந்தப்போ, அவர்கிட்டேதான் பார்த்தோம். அவர் சொன்ன மாதிரியே வரன் அமைஞ்சதுன்னு அம்மா சந்தோஷப்பட்டுக் கடிதாக கூடப் போட்டிருந்தாங்களே."

"அம்மாவுக்கு அந்த ஜோசியர் மேலே பிரமாதமான நம்பிக்கை இருக்கும் போலிருக்கு. நான் இங்கே கிளம்பி வர்றப்ப, ரெண்டாவது தங்கச்சி புவனாவோட ஜாதகத்தைக் கொடுத்து, 'புவனாவுக்கு எப்பக் கல்யாணமாகும்...? மாப்பிள்ளை நல்லாப் படிச்சவராக் கிடைப்பாரா...? அரசாங்க உத்தியோகத்திலே இருக்கிறவர் கிடைப்பாரா...? எந்த திசையிலேர்ந்து மாப்பிள்ளை வருவார்'னு அவசியம் பார்த்துட்டு வரச் சொன்னாங்க!"

"அதுக்கென்ன, பார்த்துட்டாப் போச்சு...!"

"நாளைக்குப் போகலாமா...?"

"நான் நாளைக்குக் காலையிலே ஆறரை மணி டவுன் பஸ்ஸிலே கிளம்பிப் போய் நம்ம ஜாதகத்தை முதல்ல பெஞ்சிலே வைச்சுட்டு, கொய்யாப்பழ மண்டி முதலாளியைப் பார்த்துட்டு வந்திடறேன்... நீங்க ஒன்பதரை டவுன் பஸ்ஸிலே கிளம்பி வந்தா பதினொரு மணிக்குள்ளே அங்கே வந்திடலாம். ஜோசியர், பெஞ்சியிலே வைச்சிருக்கிற ஜாதகங்களையெல்லாம் வரிசையாத்தான் பார்ப்பாரு. கோவிலுக்கெல்லாம் போய்ட்டு வந்து அவர் வேலையை ஆரம்பிக்கிறதுக்கு எப்படியும் பதினொண்ணு, பதினொன்றரையாகும்... நீங்க எதுக்கும் ஜாதகத்தை இப்பவே என்கிட்டே கொடுத்துட்டா, காலையிலே மெதுவா எந்திரிக்கலாம்...!"

"சரி மாமா!" என்றவாறே எனது பர்ஸுக்குள் வைத்திருந்த தங்கை புவனாவின் கம்ப்யூட்டர் ஜாதகத்தை வெளியேற்றி, மாமாவின் கையில் ஒப்படைத்துவிட்டு, சாப்பிட உட்கார்ந்தேன் நான்.

மறுநாள் காலை நான் ஜோசியரின் வீட்டுக்குள் நுழைந்த போது...

ஜோசியர் இன்னும் தம் தொழிலைத் துவக்கவில்லை.

பெஞ்சில் முதலாவதாய் என் தங்கையின் ஜாதகம்.

மேலும், வரிசையில் பதினைந்து ஜாதகங்கள் வெற்றிலை, பாக்கு, இரண்டு ஊதுபத்திகள் கூட்டணி அமைத்து அனைத்து ஜாதகங்களின் மீதும் குதிரை ஏறிக் கொண்டிருந்தன.

கொய்யாப்பழ மண்டி முதலாளியைப் பார்த்துவிட்டு மாமா இப்போது திரும்பி வர......

எஸ். பாலகிருஷ்ணன்

அவருக்குப் பின்னால் அனைவரும் ஆவலுடன் எதிர்பார்த்த ஜோசியர்!

வந்தவர், என் தங்கையின் ஜாதகத்தின் மீதிருந்த ஊதுபத்திகளைக் கொளுத்தி, பெஞ்சில் விழுந்திருந்த ஓட்டையின் இடுக்கில் செருகிவிட்டு......

என் தங்கையின் கம்ப்யூட்டர் ஜாதகப் பேப்பரை மேஜை மீது விரித்து......



"இது யாரோட ஜாதகம்...?" என்றார்.
"என் தங்கச்சியோடது!" என்றேன்.
"இந்த ஜாதகத்தை இப்பப் பார்க்க முடியாது. போய்ட்டுச் சாயந்திரம் நாலு மணிக்கு வாங்க!" என்று நிர்த்தாட்சண்யமாய்ச் சொன்னார் ஜோசியர்.
பகீரென்றது எனக்கு.
"ஏன் சார்...?" பவ்யமாய்க் கேட்டேன்.
"இந்தக் கம்ப்யூட்டர் ஜாதகத்திலே எனக்குத் தேவையான குறிப்புக்கள் இல்லே... கணக்குப் போட்டுக் கண்டுபிடிக்கணும்... குறைஞ்சது ஒன்றரை மணி நேரமாகும். அதுவரைக்கும் மத்தவங்களைக் காக்க வைக்க முடியாது. நீங்க போய்ட்டுச் சாயந்திரம் நாலு மணிக்கு வாங்க. இந்த ஜாதகம் கணிக்க ஒரு அறுபது, எழுபது செலவு பண்ணியிருப்பீங்களா...?"
"இல்லீங்க... வெறும் பத்து ரூபாய் தான்!"
"பொய் சொல்லாதீங்க... குறைஞ்ச பட்சம் ஐம்பது அறுபது இருக்கும்!"
"நான் ஏங்க பொய் சொல்லணும்...? நான் திருச்சி பாய்லர் தொழிற்சாலையிலே வேலை பார்க்கிறேன். எங்க கம்பெனியிலே கம்ப்யூட்டரெல்லாம் இருக்கு. ஜாதகம் கணிக்கத் தனி பாக்கேஜ இருக்கு. எம்ப்ளாயீஸுக்கு வெறும் பத்து ரூபாய்தான்!" என்றேன் சற்றே கோபமாய்.
"சரி... சரி... போய்ட்டுச் சாயந்திரம் நாலு மணிக்கு வாங்க!"
மாமாவைப் பார்த்தேன்.
"இதை அப்படியே பேப்பரிலே தமிழிலே எழுதிக் கொடுத்தால் பார்க்க முடியுங்களா? மாப்பிள்ளையைத் தமிழ்ப்படுத்தித் தரச் சொல்றேன்!"
"எனக்கென்ன இங்கிலீஷ் தெரியாதுன்னா நினைச்சீங்க... கணக்குப் போடணும்... இந்த ஜாதகத்தை இப்பக் கையிலே எடுத்தா இன்னிக்கு இந்த ஒரு ஜாதகம்தான் பார்க்க முடியும். மத்தவங்களை வீட்டுக்கு அனுப்பிட வேண்டியதுதான். நீங்க போய்ட்டுச் சாயந்திரம் நாலு மணி வாக்கிலே வாங்க...!" என்று சொல்லிவிட்டு இரண்டாவது ஜாதகத்தைக் கையில் எடுத்துக் கொண்டார் ஜோசியர்.
"என்ன மாப்பிள்ளை செய்யலாம்...?" என்றார் வெளியில் வந்த மாமா.
"எனக்கோ, என் பிள்ளைகளுக்கோ பார்க்கிறதா இருந்தா நிச்சயம் இந்த ஆள் கிட்டே ஜாதகம் பார்க்க மாட்டேன். இப்பவே போயிடுவேன். ஆனா இது தங்கச்சிக்கு. பார்க்காமல் போனால் அம்மா தப்பா நெனைச்சுப்பாங்க. 'மாமனார் வீட்டிலே போய் ஒரு வாரம் கொட்டம் அடிச்சுட்டு வந்திருக்கான். தங்கச்சியோட ஜாதகத்தைப் போய்ப் பார்த்துட்டு வர நேரமில்லாமல் போச்சு துரைக்கு'ன்னு கண்டபடி பேசுவாங்க. கொஞ்சம் தாமதித்துச் சாயந்திரம் பார்த்துண்டே போகலாம்!" கனத்த மனத்துடன் சொன்னேன் நான்.

**மா**மா சொன்னபடி கோயிலில் பொழுதைக் கழித்துவிட்டு மணி 3.45–க்கு ஜோசியரின் வீட்டை அடைந்தபோது...
"இன்னொரு அஞ்சு நிமிஷம் லேட்டா வந்திருந்தீங்கன்னா, கிளம்பியிருப்பேன். கூட்டிட்டுப் போறதுக்கு ஆள் ரெடியாக் காத்திருக்கார் பாருங்க...!" என்று அலட்டிக் கொண்ட ஜோசியர், "மாடியிலே போய் இருங்க... இதோ வந்திடறேன்!" என்றார்.
காத்திருந்தோம்.
ஐந்து நிமிடங்களுக்குப் பின் வந்தவர் என் கையிலிருந்த கம்ப்யூட்டர் ஜாதகப் பேப்பரை வாங்கி, மடமடவென ஏதோ கணக்குப் போட்டுவிட்டு...
உதட்டைப் பிதுக்கினார்.
"என்ன சார்...?" ஈனஸ்வரத்தில் கேட்டேன், நான்.
"ஸாரி... உங்க தங்கச்சிக்கு மாலைப் பொருத்தமே இல்லை!"
"ஏன் சார்...?"
ஏதோ கிரகம் ஏதோ ஸ்தானத்தில் நிரந்தரமாய்க் குடியிருப்பதாகச் சொன்னார்.
அப்போதிருந்த மனநிலையில் எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை!
பத்து ரூபாயை நீட்டிவிட்டு மாமாவுடன் வெளியே வந்தபோது......
இதயம் வெகுவாய்க் கனத்தது.
தங்கைக்குக் கல்யாணமாகாது என்ற செய்தியைக் கேட்கவா இவ்வளவு நேரம் காத்திருந்தோம்...? காலையிலேயே சென்றிருந்தால் இந்த அவலச் செய்தியையாவது தவிர்த்திருக்கலாம்!"

**ஊ**ரிலிருந்து வந்து வீட்டுக்குள் நுழைந்ததும் அம்மா கேட்டார்கள்:
"புவனாவுக்கு எப்படா கல்யாணமாகும்னு ஜோசியர் சொன்னார்...?"
"இன்னும் ஆறு மாசத்துக்குள்ளாற ஆயிடும்மா...!" இதழில் புன்னகை படர்த்தி வாழ்க்கையில் முதல் தடவையாய்ப் பொய் சொன்னேன் நான்.

நோயாளி: "டாக்டர் என்னோட கண்ணுக்கு எல்லாமே இரண்டு, இரண்டாகத் தெரியுதுங்க...!"

டாக்டர்: "முதல்ல... யாராவது ஒருத்தர் சொல்லுங்க....!"

பேஷண்ட்: "...?! ...?! ...?! ...?!"

— வி. இரேவதி.



## வட்டமேஜை

# கல்கத்தாவுக்குக் கடத்திவிட்டால் என்ன?

• வங்கச் சிறப்பிதழ் II இல் முதல்வர் ஜோதி பாக வின் பேட்டி படித்தேன். கேள்விகளும் சரி, பதில் களும் சரி, வெகு சுவாரஸ்யமாக இருந்தன. எந்தக் கேள்விக்கும் மழுப்பாமல், நழுவாமல் துணிந்து, தெளிவாய்ப் பதில் சொன்ன வங்க முதல்வரைப் போல் எல்லா அரசியல்வாதிகளும் இருந்து விட்டால் நம் நாடு அமோகமாக மாறிவிடும்.

சென்னை — 101. எஸ். ஆராவமுதன்.

• மேற்கு வங்கச் சிறப்பிதழ் I, II இரண்டுமே அருமை. அதிலும் இதழ் II வங்கச் சூழ்நிலைக்கு எங் களை அழைத்துச் சென்றது.

மோட்டாம்பட்டி. டாக்டர். சி. பாலசுப்பிர மணியன்.

• வங்க மக்களின் கலை, நிலைபெற்ற அறிவுத் தாக்கத்தை அடியொற்றி வளரும் பாங்கு போற்றுதற் குரியது. சினிமாவின் தாக்கம் தனி மனிதனிடத்தில் சலனத்தை ஏற்படுத்தாத நிலை சிறப்பு அம்சமாகும்!

ஜோதி பாசுவின் பேட்டி அவரது நேர்மை, எளிமை, பிரச்னையை யதார்த்த நோக்கில் அணுகும் தன்மை, மாநில அரசுகளின்பால் மத்திய அரசுக்கு உள்ள மாற்றாந்தாய்ப் போக்கு, போன்ற பல விஷயங் களை வெளிப்படுத்தியது.

நாமக்கல் — 2. இரா. குழந்தைவடிவேலு.

• 'செட்டிங்' என்பதே இல்லாத ஜாத்ரா நாடகங் களைப் பார்க்கப் பத்துப் பன்னிரண்டாயிரம் பேர் திரள்கிறார்களா!? 'சினிமாப் புகழ் ... .... நடிக்கிறார்' என்று விளம்பரப்படுத்திக் கூட்டம் சேர்க்க வேண்டி யுள்ள தமிழகத்துக்கும் வங்கத்துக்கும்தான் எத்தனை வித்தியாசம்!

திருக்குவளை. வெற்றிப் பேரொளி.

• கல்கத்தா விஸ்வநாதனின் கட்டுரையைப் படித்த பிறகு, 'நமது தமிழ்த் திரைப்படத் துறையினர் சிலரை யேனும் கல்கத்தாவிற்குக் கடத்தி விட்டால் என்ன' என்ற எண்ணம் தோன்றியது.

குத்தாலம். எஸ். ராஜா.

• வங்க மக்களிடையே சினிமா நட்சத்திர மோகம் இல்லை என்பதைப் படித்து சந்தோஷித்த மனம், கால்பந்தாட்டப் போட்டி முடிவுகளால் தோன்றும் கலாட்டாவைப் பற்றித் தெரிந்ததும் காற்றுப் போன பலூனாகி விட்டது!

திருத்துறைப்பூண்டி. ஜெயந்திப்ரியன்.

• வங்க மொழி நாடகங்கள், திரைப்படங்கள் வித்தியாசமானவை; பாராட்டப்பட வேண்டியவை தான். ஆனால் அதற்காகத் தமிழ் நாடகங்களையும் திரைப் படங்களையும் வார வேண்டுமா என்ன...? உணவுப் பழக்கங்கள், கலாசாரம் போல நம் துணைக் கண்டத்தில் ரசனைகளும் பலதரப்பட்டவை. சத்யஜித் ரேயின் படங்களை எத்தனை பேர் பொறுமையாக(?) ரசிக்க(!) முடியும்...?

சென்னை — 28. எம். தியாகராஜன்.

**• கல்கி 31.7.88 இதழில், பிளஸ் டு + வேலை என்ற தலைப்பிட்ட கட்டுரையில், பி. எஸ். உயர்நிலைப் பள்ளியின் ஸ்தா பகர் பெண்ணாத்தூர் சுப்ரமண்ய அய்ய ருக்குச் சந்ததி இல்லை என்று குறிப்பிடப் பட்டுள்ளது. இது தவறான செய்தி. அன் னாருக்கு இரண்டு பெண்கள் உண்டு.**

**சென்னை — 4. வி. ஆர். வாசுதேவன்.**

(மேற்படி தகவல் பள்ளியின் முக்கிய நிர்வாகி களுள் ஒருவரான பி. சி. சேகர் கூறியதன் அடிப் படையில் எழுதப்பட்டது. தவறை நமது கவனத் துக்குக் கொண்டு வந்த வி. ஆர். வாசுதேவனுக்கு நன்றி.

— ஆசிரியர்)

• 'கடன்' வங்கச் சிறுகதை அற்புதம். கதாநாயகன், பொது நலத்தின் ஒரு பக்கத்தை மட்டுமே கருதி, அதையே தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு, தன் கௌரவத்தையும், மதிப்பையும் வளர்த்துக் கொண்டு, இறுதியில் தவறை உணர்ந்து வருந்தியது நெகிழ்ச்சி யாக இருந்தது.

சென்னை — 71. முஹம்மத் லத்திப் ராஜா.

• வங்க முதல்வரின் எளிய வாழ்க்கை முறை பற்றி அறிந்ததும் பிரமித்துத்தான் போனேன். 'அரசன் எவ்வழி, குடிகளும் அவ்வழி' என்ற தமிழ்ப் பழ மொழியை வங்க நிலைமைக்கு ஏற்ப 'தலைவர் எவ்வழி, குடிகளும் அவ்வழி' என்று மாற்றிக் கொள்ளலாம்.

சுத்தரிப்புலம். இராம. ஜோதிவேல்.

• பரிசு பெற்ற 'புதிய கவடுகள்' கதை என்னை உணர்ச்சிவசப்படச் செய்தது. சந்திரன் மட்டும் என் கையில் கிடைத்தால், அவனை............! தாரிணி செம்மையான முறையில் வாழ, உடன்பிறவா சகோதரன் போல் வாழ்த்துகிறேன்.

கடலூர் — 2. ஆர். வேலுமணி.

• 'தாங்கள் உயிருக்குயிராய் மதித்த ஒரு விஷயத்தை மக்களின் பொதுநலன் கருதி விட்டுக் கொடுப்பதிலும் கூட மகத்தான தியாகமும் சிறப்பான கௌரவமும் இருக்கிறது.....' அற்புதமான இந்தத் தலையங்க வரிகள் விடுதலைப் புலிகளின் மனத்தில் பதிந்தால் நல்ல விளைவுகளை விரைவில் எதிர்பார்க்கலாம்.

ஆர். ரத்தினசாமி. புன்செய்புளியம்பட்டி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

REGISTERED No. M. 4395
Registered as a Newspaper in Sri Lanka